உ

கடவுள் துணை.

இஃது - மகாமகத்துவம்பொருந்திய

பதினெண்சித்தர்கள்

திருவாய்மலர்ந்தருளிய

# பாலவாகடத்திரட்டு

## வைத்தியம் - ௬௨௱.

சிமிட்டிரத்தினச்சுருக்க பாலவாகடமும்
தன்வந்திரி பாலவாகடமும் இதில்
அடங்கியிருக்கின்றன.

இவை-களத்தூர் தமிழ்ப்புலவர்
வேதகிரிமுதலியார் - குமாரர்
ஆயுள்வேதபாஸ்கரர்
கந்தசாமிமுதலியாரால்
பற்பலஏட்டுப்பிரதிகளைக்கொண்டு ஆராய்ச்சிசெய்து
முன் அச்சிட்ட பிரதிக்கிணங்க

பூவிருந்தவல்லி,
சுந்தரமுதலியாரது,
சுந்தரவிலாச அச்சுக்கூடத்திற்
பதிப்பிக்கப்பட்டது.

1890.

உ

கடவுள் துணை,

---

# விளம்பரம்.

இதனால்சகலருக்குந்தெரிவிப்பதுயாதெனில் மதுரை
புதுமண்டபத்தில் பீங்கான் ஷாப்புக்கடை வியாபாரஞ்
செய்யும் ம-ள-ள-ஸ்ரீ, ச-பீருகாதிராவுத்த ரவர்
கள் கடையிலும் திருநெல்வேலி பொஸ்தகஷாப்புவியா
பாரஞ்செய்யும் ச - பீ - சேகு அப்துல்காதிருருவுத்தர
வர்கள் கடையிலும், தமிழ், துலுக்கு கிரந்தம் தெலுங்
கு, காலேஜ் முதலான புஸ்தகங்களும். ஆறுமுகநாவலர்
ஊ - புஷ்பரதசெட்டியார் இவர்களால்போடப்பட்ட பு
ஸ்தகங்களும், யாழ்ப்பாணம் புதியபதிப்பு அகராதியும்,
ஆரியப்பபுலவரால் செய்த பாகவதகவியும், ஷாப்புவியா
பாரமும் வேண்டியவர்கள் விலைசரசமாய் திருநெல்வேலி
புஸ்தகவியாபாரம் செ-ம- உதுமான்ருவுத்தரவர்களிடத்
திலும், பெற்றுக்கொள்ளலாம்,

இப்படிக்கு ஷை குமாரர்,

☞ ச-பீ-சேகு அப்துல்காதிருருவுத்தர்.



உ

சிவமயம்.



# இந்நூலச்சிட்டவர் கருத்து.

மாட்சிமைபொருந்திய சினேகிதர்களே இவ்வுலகத்தின்கண் அனேகசித்து மகாபுருஷர்கள் ஆயுறுவேதமாகிய வயித்தியகிரந்தங்களை அனேகமனேகமாய்ப் பாடியும் நாம்கேள்வியுற்றவரையில் வயித்தியகிரந்தம் (௨) லட்சமென்றும்வாதகிரந்தம் (௧) லட்சமென்றும் பெரியோர்கள் கூறியிருக்கிறார்களல்லவா ஆனால் அவர்கள்சீவியசரித்திரங்களோ மறைவாயிருக்கின்றன மேலும் தற்காலம் பண்டிதாளுக்குபயோகமாக பதினெண்சித்தர்கள் திருவாய்மலர்ந்தருளிய பாலவாகடத்தில் தன்வந்திரி பிரமமுனி அகத்தியர் தேரையர் வாரிஷி யூகிமுனி சட்டமுனி கோக்கர் மச்சமுனி கமலமுனி சோதிரிஷி நந்தீசர் மூலத்தீசர் இவர்களால் திருவாய்மலர்ந்தருளிய பாலவாகடச் செய்யுட்களை கோர்வையாகத்திரட்டிப் பாலவாகடமென்னும் இயற்பெயர் கொடுத்து சகலமான பண்டிதர்க்கும் பிரமுகாளுக்கும் ஏழையோர்க்கும் பெரும்பாலும் எளிதிலுணரும்பொருட்டு குழந்தைகள் பரிதாபம் பற்றி இந்த பாலவாகடத்தை கற்றோருக்கும் குழந்தைகளைப் பெற்றோருக்கும் மயங்காமல் எளிதிலுணரும்பொருட்டு முதல்பண்டிதாளிலக்கணமும் கற்பக்கோளிலக்கணமும் பாலவாகடத்திரட்டிலக்கணமும் அந்தந்த வியாதிகளின் குறிக்குணமும் அதற்கு அவிழ்தங்களும் இன்னம் பலபல அருமருந்துகளும் பத்தியபாகங்களும் பாலகிரகமுஞ்சேர்த்து அச்சியற்றினேன் இந்நூலில் இயந்திரம் மந்திரம் பஞ்சாட்சரம் புனல் சொரிதல் சேவற்பலி ஓந்தி உடும்பு முதலே காக்கை வெளவால் சர்ப்பம் இவைமுதலிய கிரியையும் கொலையும் வடக்கயிறும் சொல்லியிருப்பதால் இதில் சகலரும் எழுத்துக்குற்றஞ் சொற்குற்றம்பொருட்குற்றம் ஏதிருப்பினும் பெரும்பாலும் அங்கிகரிப்பர், இந்நூலிற்சிமிட்டுரத்தினச்சுருக்கமும் தன்வந்திரி பாலவாகடமும்இதற்குட்பட்டநூலாதலால் வேறே சில்லரைக்கோர்வையாயச்சிட்டதும் இதற்குள்ளடங்கியிருக்கின்றன,

இப்படிக்கு இந்நூல் சீர்திருத்தி அச்சிட்டவர், வேதகிரிமுதலியார்குமாரன் ஆயுள்வேதபாஸ்கரன் கந்தசாமிமுதலியார்,



உ

கடவுள்துணை.

## கடவுள் வணக்கம்.

எண்சீராசிரியவிருத்தம்.

சீர்கொண்டநிலவுபுயல் பரிதிதாரை
திகழண்டகோளமலைதியுமடங்கல்
பார்கொண்டகடலுலவை சராசரங்கட்
படைத்துக்காத்த நவாதபரோட்சமேலும்
பேர்கொண்டவொழுங்கழிப்ப வருட்பிரவாகம்
பெயூசமுறழ் தரும்பேரானந்தத்
தார்கொண்டவிபாபகவா ணிர்விகார
சாட்சாத்காரப்பொருளை ஸ்தௌத்தியஞ்செய்வாம்.

## அகத்தியர்வணக்கம்.

எழுசீராசிரியவிருத்தம்.

சகத்திரபாணுமுடிபரந்தடாலுவினற்
சாற்றாதாகரியமெய்ஞ்ஞான
மகத்வப்பிரபாதீகத்திருசுகர்ம
வரோதயமிழம்பொளிர்தழைந்தக்
குகத்திரண்முனிவர்புடைகொளவினங்
குராங்கியந்தவழ்பொதிகையினவா
முகத்தியர்பத்மபூஞ்சலனமஞ்சிரத்தி
னணிந்துநவரதமுந்துதிப்பாம்.

## அவையடக்கம்.

அறுசீராசிரியவிருத்தம்.

பாலதனைப்பாச்சியென சோறதனைசோச்சியென
பாலர்நாவாற்
சிலமொழிமழலைமொழி மிழற்றிடினும் பெரியோர்கட்
சிணங்கொள்வாரோ
சேரவிருவம்பகமு ளார்க்குக்குருடன்கோல்கை
கொடுத்தார்க்க
மாலுடனேகாட்டிதல்போல் பிடகருக்குசிறறிவேன்
வழுதலன்றே



௳

சிவ மயம்.

இஃது

# பண்டிதாவிலக்கணம்.

அறுசீராசிரியவிருத்தம்,

பண்டைமுறைமைகேட்கில் பழிப்பிலான்சலிப்பிலானுங்
கொண்டதோர்உறுப்பில்சற்றுங் குறையிலான்பொறைபிலானும்
வண்டணிகுழலாய்கம்பி மாதைத்தாய்தந்தைபோல
மண்டலமொக்கஎண்ணில் வைத்தியனாகுந்தானே, (௧)

இதுவுமது,

உத்தமகுணத்தையுள்ளோன் உயர்பெறுங்கீர்த்தியுள்ளோன்
புத்தியாலாய்ந்துசொல்வோன் பொருள்களையாயவல்லோன்
சத்தியவார்த்தையுள்ளோன் தருமசிந்தனையேயுள்ளோன்
* சுத்திரவார்த்தைபேசா குணன்பரிகாரியாமே, (௨)

* சுத்திரம்-பொய்

இதுவுமது

மண்ணில்மேற்பெண்ணுனுக்கும் மற்றுளபல்லுயிர்க்கும்
கண்ணினில்இமைபோற்காக்கும் *கடவுளான்கருணையுள்ளோன்
எண்ணியபெண்ணுமெல்லாம் நாடியதந்தைதாயென்
றெண்ணியேமருந்துசெய்யில் இடர்பிணிதீருமென்றே. (௩)

* கடவுள்-குரு,

இதுவுமது,

வேறு

* குணங்கள் *குறிகள் நாடியினால்குறித்து மனத்தின்திடமுதனால்
பிணங்கியேறும்பிணிபலவும் பின்முன்கண்டுதானறிந்து
வணங்குமருந்தால்மந்திரத்தால் மஹாதேவகடாக்ஷத்தால்
இணங்குமாகில்மருந்துசெய்வீர் என்றேமுனிவரியம்பினரே. (௪)

* குணங்கள்-அவ்வவ் வியாதியின்குணங்கள்

* குறிகள்-விழி-நாசி நா-மலசலக்குறிகள்

* நாடி-வாத-பித்தசேஷ்ம-பகுப்பால் பிணிகளைக்குறித்தறிதல்.

இதுவுமது,

வாகடசாஸ்திராதி முறைமற்றுங்கருவிகாணுதி
பாகமிதஞ்சேர் * பரிசனையும் பருவமருந்தின்பதமுறையும்
வேகமருந்தின்சீர்முறையும்விடஞ்சேர்மருந்துமிகதள்ளி
மேகம்போலவொழியவல்லோன் வித்தாரபிடகனெனலாமே. (௫)

* பரிசனை-பழக்கம்-வேதமுடையவும் விஷமருந்துந் தள்ளிசெய் யென்பது கருத்து

வேறு.

குருவினைநினைத்துக்கொண்டு குணங்கண்டுப்பிணியைத்தீர்க்க
மருவியவியாதிகொண்டோன் வாகுடனாடிக்கண்டால்
திருவினைவென்றசோதி தீருமோநாலிலொன்று
வெருவிடாமருந்துதன்னால் மீளுமூக்கூறுந்தானே, (௬)

வேறு

பாயிரமுழுதுநூலின் பாட்டியலறிந்துகொண்டு
மாய்கிறமனிதர்க்கன்பாய் மருந்துடனாடிப்பார்க்க
* ஆயுறுவேதந்தன்னை யருள்கணால்வடநூல்பார்த்து
போயுறுபொதிகைவாழும் புகழ்முனிபருள்செய்தாரே (௭)

* ஆயுறுவேதம்-வைத்தியசாஸ்திரம்

வைத்தியருங் கின்னவஸ்திரமாக இன்னவஸ்திரம்
உடுக்கவேணக்கூறுகின்றார்.

வேறு,

காங்குசிவப்புபலபுள்ளிக் கமழும்பட்டுமாவரிகள்
நீங்குமிவைகள்துகிலுடுக்க நேரோயாகாவைத்தியருக்
கோங்குவெள்ளைத்துகிலுடுத்தி புன்னைநினைந்துமருந்துசெயில்
பாங்குபெறவேபிணிதீரும் பாரிற்பெரும்பண்டிதரே. (௮)

பரிமளவர்க்கம் அணிதலும்-கிரியையுங்-கூறுகின்றார்.

வேறு,

சந்தனம்புனுகுபிச்சு சடத்தினிற்பூசிபின்னர்
* அந்தணர்கிரியைபோல * ஆசிரியனடிவணங்கி
சிந்தையிற்குருவைவாழ்த்தி சிவபதம்நெஞ்சிலுன்னில்
வந்தநோர்பிணிகள்தீரும் வைத்தியன்முறையென்றுமே (௯)

* அந்தணர் முனிவர்ஆசிரியன் குரு

குறள்,

அந்தணரென்போ ரறவோர்மற்றெவ்வுயிர்க்குஞ்
செந்தண்மை பூண்டொழுகலான்

ஆகையின் அந்தணர் பார்ப்பாரெனக்கொள்ளாமல் எவ்வுயிருந்தன்னுயிர்போல் நினைக்கும் புண்ணியபுருஷோத்தமரெனக்கொள்க.

நான்குவிதபண்டிதர்க்கும் எச்சரிக்கைகூறுகின்றார்

நிலமண்டில ஆசிரியப்பா.

சாத்திரமறிகிலார் சதுர்விதபண்டிதர்
வார்த்தையின்பலத்தினால் மருந்தையீந்திடில்
கோத்திரங்கிளையொடு குலங்கள்வேரற
வீழ்த்திடநாகினில் வீழ்வதுதிண்ணமே. (௰)

இதுவுமது,

எண்சீர்க்கழிநெடில் விருத்தம்.

அச்சமறவைத்தியரோநோயிலுள்ள அசாத்தியசாத்தியமு மிரண்டறிந்து, பக்ஷமுறகுறிகுணமெய்ப் பரிசபார்த்து பரிகாரமாய்மருந்து பகிரீராகில், சச்சமறுங் கிளைகுலங்கள் வேரோடற்றுந் தாணிதனில் வெகுபாவந் தலைமேற்கொண்டு, இச்சையறளரிநரகில் வீழ்வதல்லால் இகபரமொன்றில்லாம லேங்குவீரே. (௰க)

பிணிதீர்த்தவைத்தியர்க்கு பணங்கொடாதலோபிகட்

கின்னவையென்று-கூறுகின்றார்.

வஞ்சமறவுழன்றுபிணியாளர்தங்கள் மகவதினும் பதின்மடங்கு மருந்துபார்த்து, நெஞ்சதனில்நோயாளிப்படிநிதானம் நிறுத்து மந்த வைத்தியர்க்கு நிதிகொடாமல் பஞ்சைமொழிப் பகருமரும்பாவியோரைப் பாழ்நரகில்வீழ்நமன்பாசத்தாலே, அஞ்சவிழுத்தடித்துதைத்து ஆழ்த்துவாரென் றகத்தியருமிந்நூலை யருள்செய்தாரே. (௰உ)

இன்னின்னவனுக்கு மருந்துபலிக்காதெனக்கூறுகின்றார்

அறுசீர்க்கழிநெடில்-விருத்தம்.

கன்னெஞ்சன்வழிபறிப்போன் கண்டதன்பிறகேசெல்வோன்
வன்னெடுங்கோபமுள்ளோன் மாதர்மேலாசையுள்ளோன்
பொன்னையேபுதைத்துவைத்து *பிடகர்க்குப்பொய்யைசொல்வோன்
இன்னெடுங்கொடியபாவிக் கிடுமருந்தேறாதன்றே, (௰௩)

* பிடகர்-வைத்தியர்,

இன்னின்னவர்க்கு பிணிதீராதெனக் கூறுகின்றார்

பஞ்சமாபாதகர்க்கு பழிதனைநினைப்பவர்க்கும்
நெஞ்சியேமருந்துசெய்து கேடுகள்நினைப்பவர்க்கும்
அஞ்சிடாவஞ்சகர்க்கும் அநியாயக்காரருக்கும்
நஞ்சினுங்கொடியவர்க்கும் நாடியேபிணிதீராதே. (௰௪)

இன்னின்னவர்க்கு வைத்தியஞ்செய்யெனக் கூறுகின்றார்

தரித்திரப்பட்டபேர்க்குந் தருமத்தையடைந்தபேர்க்கும்
கருத்துடன்பிணிதீரொன்றுக் கபடன்றிமெய்சொல்வோர்க்கும்
பெருத்திடுந்தனங்கொடுத்துப் பிணிதீருமென்றபேர்க்கும்
உருக்கமாயுண்ணும்பேர்க்கும் உடன்வைத்தியஞ்செய்வீரே, (௰௫)

இதுவுமது.

வேதியவேடத்தோர்க்கும் விளங்கியகுருக்கள்மார்க்கும்
நீதியாயுள்ளபேர்க்கும் நெறிமுறையுள்ளபேர்க்கும்
சாதியாயுள்ளபேர்க்குந் தவநெறியுள்ளபேர்க்கும்
பேதியாமல்மருந்து செய்திடப்பிணிபோமென்றார் (௰௬)

ஔழ்தஞ்செய்யவும் உண்ணவும் இன்னின்னக்கிழமை
யாகும் இன்னின்னக்கிழமையாகாதெனக்
கூறுகின்றார்.

காரியும்புதனுந்திங்கட் கருதிடில்மருந்துதீதாம்
சீரியவெள்ளிநோயாம் செவ்வாய்வியாழம்பிணிதீரும்
பாரினிலுள்ளபேர்க்குப் பரிகாரஞ்செய்யவேண்டில்
ஆரியனருளினாலே அருக்கனில்மருந்துசெய்யே. (௰௭)
நாளுங்கிழமையும் நலிந்தோர்க்கில்லை

இதுவுமது.

வேறு.

ஆதித்தனுதித்தமூன்றேழுக்கால் அறிந்துபிணிக்கு மருந்துசெய்வீர். ஆதித்தனுதித்தமூன்றேழுக்கால் அறிந்துபிணிக்கு மருந்துகொள்வீர், ஆதித்தகிரணமிருபோதும்அறிந்தவுடனேமருந்துசெய்வீர், ஆதித்தன்சாட்சியாய்ப்பிணிதீரும் * அயனம் *விருத்தமும்வாராதே. ()

* அயனம்-பிறப்பு. * விருத்தம்-மூப்பு.



உ

கடவுள் துணை,

---

மகாமகுத்துவம்பொருந்திய

பதினெண்சித்தர்கள் திருவாய்மலர்ந்தருளிய

# பாலவாகடத்திரட்டு

## ௲௨௱.

## கற்பக்கோளிலக்கணம்.

---

பதினெண்சித்தர்கள் சொல்லிய

பெண்கள்தோயாப்பூவுக்கு

ஔழதம்.

எண்சீராசிரியவிருத்தம்.

மீறுமல்தூரமிலாப்பெண்களுக்கு
வேலியிலைபரித்திச்சாறருந்தத்தீரும்
கூறுநதுதூளையுங் குப்பைமேனிக்
கொட்டைகொட்டையாய்க்கிடக்குங்குளத்துப்பாசி
ஏறுமற்புன்னைக்காயளவுகூட்டி
யிதனுடனேசர்க்கரையுங் கலந்துக்கொண்டு
பேருகமூன்றுநாளருந்தும்போது
பிறப்படுமேசெங்குருதி சிவப்பதாமே, (க)

(ஆண்பிள்ளைகள் பிந்து தடைப்பட்டால் ஔழதம்)

தாவென்றஆண்கட்டுத் தடையாய்ப்போனால் சங்கம்வேர் நீர்முள்ளிவிரையுங்கூட்டிப், போமென்றசோதிக்கொச் சுட்டச்சாம்பல் புகலைலம்விழுதுடனேமுத்தங்காசு, ஆமென்றஆவின்பால்தன்னிலாட்டியதனுடனேசர்க்கரையுங் கலந்துகொள்ள, ஏமென்றஇந்திரியங்கவிதமாகும் இஷ்டமுடனாறுபோக மிசைந்துபண்ணே, (உ)

மலட்டுச்சின்னவிகற்பங் கூறுகின்றார்.

இசைந்ததொருபெண்மலடு எங்குமில்லை எதனாலேமலடானசேதிகேளு, அசைந்திருக்கும் பேயாலும்பித்தத்தாலும் அடிவயிறுநொந்

ஆவரும் வாயுவாலும், பிசைந்தகர்ப்பப்புழுவாலும் கிரகத்தாலும் பிணியாலுமேகவைசூரியாலும், துசங்கெட்டகலவியினாற்பூவொழுங்கித் துலங்காமற் பிள்ளையில்லை சொல்லக்கேளே, (௩)

கற்பத்துக்கு ஔழ்தம்.

கேளுநீகற்பந்தான்வாழ்வதற்குக் கெடியானதோர் நாளுங்கள்ளியின்வேர் ஆளவேயரைத்துப் புன்னைக்காய்போல் ஆவெண்ணெய்ப்பாக்களவுகலந்துக்கொண்டு. மீளவே குளித்தமுதல் மூன்றுநாளும் நினைவாகவேயருந்தகர்பமுண்டாம். கோளவேபத்தியந்தான் புளிபுகையும்உப்புங் கொள்ளாமல்ஆவின்பாற்சோறுமுண்ணே, (௪)

கற்பத்துக்கு வேறுமருந்து.

உண்ணவேவேப்பலகுசிந்தில்கண்டு உயர்முத்தக்காசுடனேபொக்கக்கூட்டி, கண்ணவேசாருறியும் கெய்யுமருங் கலந்ததனைக்கொதிப்பித்துக்காலைமாலை திண்ணவே களித்தமுதல் மூன்றுநாளுந் திடமாக அருந்திவாகர்ப்பமுண்டாம், எண்ணவேசிந்தில்வேர் நாளுங்கள்ளி இதமாகவோரைத்துப் பாலில்தாக்கே (௫)

தாக்குவாய்ப் பெருங்காயம் இந்துப்போடு தவறாமலேபுளியம்புநணிகூட்டி, ஆக்கமுடகற்றாழைவேரின்சாற்றால் அரைத்துநீயுருட்டிடுவாய் புன்னைக்காய்போல், ஏற்கவேகுளித்தமுதல்மூன்றுநாளும் இதமாகவேயருந்த கர்ப்பமுண்டாம், கேட்கவேவாயுஅரும்பூச்சுவீழுங் கெடியானதோஷவிஷக்கிரகம்போமே. (௬)

கற்பத்திற்கு வேறு மருந்து.

விஷபாலைவெட்பாலை வாலுழுவைகடுக்காய் வேண்டுகெல்வித்தான்றிக்காய்க் கொன்றைப்பட்டை நிசமானகொடிவேலிஇந்துசுக்கு நிரையாகவகைமூன்றுகழஞ்சுகூட்டி அசப்பாணபிரமிச்சாறுவின்பாலும் அப்பனேவகைக்கு இருநாழிகூட்டி பிசகாமல்முன்பழுந்து சாறனைத்துமின்னையுமே ஆவிநெய்நாழிகூட்டே. (௭)

நாழிநெய்யுடன் மருந்தெல்லாங்கூட்டி நன்றாகக் கொதிப்பித்து மெழுகுபோல, தாழியாங்கலசத்துள்வடித்துக்கொண்டு தவறாமல்முழுக்குவந்த மூன்றுநாளும் ஊழியாம்இருபோதுகாண்டியுண்ண உத்தமம்கற்பமுண்டாம்உறுதியாகும் காளிமெயனுஞ்சாமுண்டிப் பிசாசுநோய்கட் கடந்தோடும்பத்தியம்நீகண்டுகொள்ளே. (௮)

## கற்பக்கோள்.

பாரப்பா பெண்மலடாங் கர்ப்பக்கோளின் பக்குவந்தைச்சொல் லுகிறேன் பண்பாய்க்கேளு ஆரப்பா ஆண்மலடுமே யாருமல்லால் அப் பனேபெண்மலடு யாருமில்லை, நேரப்பா தவமிருந்தும்பொருளை யீந்து ம்நேராக இல்லையது குலையாலே, வேரப்பா தேவதையோ பேழாங்கர்ப் பம் விரித்துநன்றாய்ப் புகலுகிறேன் விரும்பிக்கேளே. (௧)

கருங்குழியின் ஆறுவியாதியுங் கூறுகின்றார்.

புகலுகிறேன்முதல்தான் மலடியென்றப் பூவைக்குகருங்கு ழிதான்விளக்கமற்று. அகலுகிறேன்அகலாமல பாசம்பற்றி அடைத் திருந்தால்விந்தங்கே யணுகாதப்பா, நிகலுகிறேன்மறுதாந்தான் கருக் குழியில்வாழு நிறைந்திருந்தால்விந்தங்கே நோதப்பா, தகலுகிறேன் பின்னுமங்குகருக்குழியில் மூடி தசைவளர்ந்தால் விந்தங்கேதான்செ ல்லாதே. (௨)

செல்லாதுநாலாவதப்பாகேளு சிறியவட்கருக்குழியில் புழு தான் சேரில், செல்லாதுஐந்தாவ தப்பாகேளு செறிந்தங்கே கருக்குழியில் சேரிக்கட்டி, செல்லாது ஆறாவ தப்பாகேளு செப்புகிறேன் கருக்குழி தான் மதர்த்திருந்தால், செல்லாதஅவைஆறு வியாதியாகுஞ் சென்ற பின்விரோதமேழாகுங்காணே, (௩)

கருக்குழிவிளக்கமற்றுபாசம்பற்றிய முதல் வியாதியின்

குணமும் அதற்குஔஷதமுங்கூறுகின்றார்.

காணப்பா இவைவிபரம் விரித்துச்சொல்வோம் காரிகைக்குப்பு ணர்வேளைத் தலைதாமுழுந்தால், கோணப்பாகருக்குழியிற் பாசம்பற் றிக் கொண்டுதென்று நானதற்கு சாந்திசெய்வாய், பூணப்பாகோழியு டப்பித்துதானும் புகழானபரிகதிவிளை பருப்போடொக்க தோணப் பாஅவள்குளித்த அன்றுதொட்டுச் சொல்லுகிறேன் மூன்றுநாளை றைத்துக்கேளே, (௪)

கருக்குழியின் வாயுவினலாய இரண்டாம்வியாதியின்

குணமும் அதற்குஔஷதமுங் கூறுகின்றார்.

கேளப்பா இம்மருந்தையோனிக்குள்தேய்த்துக் கொடியாளபுரு ஷனையும் புணரச்சொல்லி, நாளப்பா இப்படியே மூன்றுநாட்செய் நல மானபாசமற்றுக் கர்ப்பமுண்டாம், ஆளப்பா புணர்வேளையுடப்புநொ

க்தால் அப்பனேவாயுநிறைந்திருக்குமென்று, வாளப்பா பெருங்காய
ம்நல்லெண்ணெய்வார்த்து மத்தித்துயோனிக்குப் பூசச்சொல்லே, (௫)

கருக்குழியில் சதைவளர்ந்த மூன்றாம்வியாதியின்
குணமும்அதற்கு ஔஷதமுங் கூறுகின்றார்.

பூசியேமூன்றுநாள் புணர்ந்தாளாகிற் புதல்வருண்டு மூன்றாவதப் பாகேளு கூசியேபுணர்வேளை யவட்குநாளுங் குறையாமல் கெஞ்சு வலிபிடித்தாளானால், நாசியேயோனியெல்லாங் கருகிக்கொள்ளுந் தசைவளர்ந்திருக்குமெதன திப்பிலிபூரம், மாசியேகோழியுடப்பித்துச்சேர்த்து வாட்டியேயோனிக்குள் தடவச்சொல்லே, (௬)

கருக்குழியிற்புழுசேர்ந்த நாலாம்வியாதியின்
குணமும் அதற்கு ஔஷதமுங்கூறுகின்றார்,

தடவியேமூன்றுநாட்புணர்ந்தாளாகில் தப்பாதுபிள்ளையுண்டாம் நாலாங்காட்சி, அடவியேபுணர்வேளைமுதுகுநொந்தால்அவட்கங்கேகிருமிநிறைந்திருக்குமென்றும், விடவியேஇந்துப்புஅரிதாரம்காயம்வெந்நீரில்மூன்றுபணைத்தூக்கியாட்டி, தடவியேமூன்றுதினம் யோனிக்குள்தேய்த்துப் படுத்திடவேபிள்ளையுண்டாம் பண்புதானே- (௭)

கருக்குழியிரத்தமூடி யஐந்தாம்வியாதியின்குணமும்
அதற்கு ஔஷதமும் கூறுகின்றார்,

தானென்றஐந்தாவதப்பாகேளு தழுவையிலேகெண்டைக்கால் வலித்துதானால், வாவென்றசோரியவட் கருக்குழியைமூடி மறைந்திருக்குமெதன்றறிந்து மைந்தாசீயும், பாவென்றகடுக்காயும்பஞ்சதாரை பச்சைபூரம்புழுகும் ஆட்டிவாங்கி மாவென்றஅவன்குளித்த மூன்றுநாளும் மாதுஉண்ணஉள்ளுக்குக்கொடுத்திடாயே. (௮)

யோனியிற்பூசுமருந்தும் கருக்குழிமதர்த்திருக்கும்
ஆறாம்வியாதியின்குணமும் அதற்குஔஷதமும்

கொடுத்திடவேபிள்ளையுண்டாங் குறைதானில்லைக், கூறக்கேள் யோனிக்குமருந்துகட்டு, நடுத்திடவேகுங்குமப்பூஅரிமதுராந்தாளும் நறசீரகத்துடனே மூன்றுங்கூட்டி, படுத்திடவேயோனிக்குப் பூசிக்

கொண்டுப் பாயலில்புணர்ந்திளவே கற்பமுண்டாம், எடுத்திடவே ஆறுவதப்பாகேளு வப்பமிட்டால் புணர்வேளை மதர்த்துதென்றே, (கூ)

மதர்த்துமேகொழுத்திருக்குதென்றுதானும் வாகானசவர்க்காரங்கடுக்காய்ச்சாரம், சதைத்திவைகட்சமனுகஅரைத்துவாங்கிநடவியே புணர்திடவுமூன்றுநாளும், பிறத்துமெத்த கர்ப்பமுண்டாம் ஏழாங்காட்சிப் பேயாலும்பிசிராலும் பிழைநானுண்டு, சுகத்துமினிசாந்தியொன்றுசூட்சமாகச் சொல்லுகிறேனன்றாகக் கேளுகேளே. (ய)

சாந்திகூறுகின்றார்,

கேளப்பாசூதஇலைமாதளையினிலையுங் கொடியானகஸ்தூரிமஞ்சள்தானும், நாளப்பா அரைத்துநன்றாய்ப் பாதமுதல்சிரசு நயமாகமேல்நோக்கிதடவச்சொல்லி,வேளப்பாபுருவுனைதானுதிக்கசெய்து,விபாமுடன்கீழ்நோக்கிப் பார்க்கச்சொல்லி வாளப்பா மருந்தெல்லாந் துாற்றிவாரி மாயிலையிலெல்லாந்தான் வாங்கிக்கொள்ளே. (யக)

வாங்கியதோர்மருந்ததனை அவள்முன்காட்டி 'மைந்தனே வாசலிலேபுதைத்துவைத்து, பாங்கிதனைக் குளிப்பித்துப் புடவைநல்கப் பண்பானஅகிலுடனே சாம்பிராணிகந்தம் தேங்கயதோர் தேகமெல்லாம்புகைத்துநன்றாய் தினமொன்றமூன்றுநாம்புகைத்தபோது, ஏங்கியதோர்தேவதையும் பூதப்பிரேதம் ஏவலொடுபிசாசுவகையெல்லாம் போமே, (கஉ)

மருந்துஎடைபாகங் கூறுகின்றார்,

போகுமப்பாமருந்துவகை யோனிக்குட்பூச பூட்டுகிறேனெடைபாகம்பிரிததுக்கேளு, ஆகுமப்பாவகையொன்றுபணஎடைதானொன்றுஆண்பிள்ளைக்கவ்வண்ணமரைத்துப்பூசு, ஏருமப்பாபெண்ணுக்குப் பணஎடைதான்ஐந்து எடுபடுங்காண் வியாதிமுதல்விரோதமெல்லாம், பாகுமப்பாமலடில்லைப் பிள்ளையுண்டாம் பாடினேன்கர்ப்பத்தின்கோளாந்தானே, (யங)

பத்தியங்கூறுகின்றார்,

தானென்றபத்தியஞ்சூக்ஷத்திற்சொல்வேன் சாதகமாய்க்கட்டியதோர்உப்புமாகும், வேனென்றப்புளியானை சீயக்கொழுந்து மேலானநெல்லிக்காய்அரிநெல்லிக்காய், தேனென்ற வெள்ளாடுமுயக் ஆமையாகுந்திறமானஊர்க்குருவி காடைமானும், பானென்றமறையாகுஞ் சுறுமீனுகும் பண்பானவெளிறறுமீன் மிளகுமாமே, (யச)

ஆமப்பாசர்க்கரைதேன் சிறுகீரையாகும் ஆவின்பால்நெய்யாகுஞ்சிறுபயறுமாகும், ஆமப்பாதுவரையோடு பொன்னுங்காணி அவ

ணைக்காய் தூதுவேளை சமூலமாகும், ஆமப்பாதித் தித்தமெல்லாமாகும்
ஆகாரனைகப்பாசாபுளிதுவர்ப்பாகா, ஆமப்பாபழவகைகளெல்லா மாகு
ம் ஆத்தாட்குப்பூசித்த மதுவுமாமே, (௧௫)

மதுவாகும்குளிர்ந்தசலங்கிட்டாகா மைந்தனே கொதிதண்ணீர்
மிகவுநன்று, சலவாகும்வேதமுறைகண்டுசொன்னேன் சத்தியந்தான்
இந்தநூல்சார்ந்தோர், அதுவாகும்இதுவாகுமென்றேயெண்ணிஅலை
ந்தலைந்துதிரியாமல்சுருளை நோக்கி பொதுவாகும்நினைவுகொண்டுஇரு
ப்பாசாகில் புத்திசித்திமுத்திமுதல் புனிதமாமே, (௧௬)

கற்பக்கோள் - முற்றிற்று,



உ

கடவுள் துணை,

அகஸ்தியர் திருவடிகளே சரணம்.

# பாலவாகடத்திரட்டு.

கடவுள்வணக்கம்,

எண்சீராசிரியவிருத்தம்,

சீரானபராபரத்திற்பரமாய்நின்று திரிபுவனந்தாக்கியவையாளு
மென்றப், பேரானவஸ்துவெனும் விமலர்பாதம் பேணியேநடஸ்க
க்குப்பிரியமாக, நேரானபாலசாஸ்திரத்தைப்பாட நினைந்துமுந்நூல்
விதித்தபடிநேர்மையோடு, ஞானமதிமாயைத் தொழிலேமிக்கிச சொ
ல்லுகிறனுள்ளபடிச் சொல்லுகிறேனே. (௧

சேஷார்த்தவீட்சியம்.

அறுசீராசிரியவிருத்தம்,

வாலக்கிரகக்குணக்குறியு மருந்தும்மந்திரம்இயந்திரமும்
காலக்கருப்புந்நீர்சொறிதல்கட்டுங்குளிசமேவருடனே
நோய்க்குளிகைஎண்ணெய்த்தனைக் குணத்தின்படியே சொல்வதற்கு
சிலைக்குதவாம்வினயகனார் சிந்தித்தோர்சஞ்சீவியென்றே. (உ

நூல்,

கற்ப ஸ்ரீகட்கு (ய) மாதத்திற்கும் வருநோயும்

அதற்கு ஔழ்தமுங்கூறுகின்றார்

கலிவெண்பா அதுவேஉரை

௧ அத்தியுரித்தோனிடத்தில் அமர்ந்தஉமையாளீன்ற
சத்திக்கணபதியின் தாள்போற்றி எத்திசையுங்
௨ கெர்ப்பமின்றாருக்குக் கிளைத்தபிணிதானதிர
கற்பமதாங்கிரியைக் கண்டுரைப்பேன் உற்பத்தி
௩ திங்கள்முதல்கற்பஞ் சிறுவலியாய்தான்வலிக்கில்
எங்கள்மறைப்பூசந் திராமிச்சு மங்கைநன்னீர்
௪ வார்த்தரைத்து அப்பிலில் வாகாகவேகொடுக்க
சேர்த்திரண்டாமாதஞ் சிலுகிறல் மாற்றிகொள்
௫ தக்கோலம்தாமரையின்கன்பூவும்நீரரைத்து
அக்காலமேகொடுநீ ஆவின்பால் எக்காலம்
௬ மூணாந்திங்கள்தனில் முறுக்கிவயிறூளைக்கில்
வாணிமலர்செங்கழுநீர் வண்கிழங்கு பேணி
௭ பாலிலரைதகொடுக்க பாவையர்க்குக்கர்ப்பம்
நாலில்வலித்து ரத்தம்நாடிறல் சூலியர்க்கு
௮ நெய்தல்கிழங்குநொச்சில் நீர்வார்த்தரைத்து
உய்தபசும்பாலில் உண்ணவே ஐந்தாம்
௯ மாதம்வலிக்கில் வரும் ஆம்பலின்பூவும்
வேதமளாவிலாமிச்சம் வேறும் போத
௰ நீர்வார்த்தரைத்து நிட்செயம்பாலிற்கொடுக்க
கூர்ஆரில்கற்பக் குடலழன்று நேரோ
௧௧ சுற்றிக்குடல்வலித்துச் சுழன்றுமேநீர்சுருக்கில்
பற்றியிதற்கும்மருந்து பகரக்கேள் உற்ற
௧௨ திப்பிலியுமுந்திரிகை சேர்ந்தநெய்தல்கிழங்கு
அப்பில்அரைத்துப்பாலிலேயருந்த ஒப்பில்லா
௧௩ ஏழில்வலிக்கில் இராமிச்சம் சந்தமும்
வாழுந்தக்கோலம் வகைமூன்று சூழும்
௧௪ கோவினிடப்பாலில் கொடுக்கஎட்டாமாதம்
பாவைகைகால்அயரும் பசிக்கன்னந் தேவை
௧௫ இல்லைதான் இன்னம் இதற்குமரைப்பூவும்
தொல்லைநெய்தல்கிழங்கும் தொந்தித்து நல் ஆவின்

கசு பாவிலதைகொடுக்க பாவைநவமாதம் கோவி
சூலின்வலிக்காணில் அரசந்தோலும்

கஎ மருநந்தோல்நீரில் வாகாகவேயரைத்த பருகப்
கருத்தாய்ஆவின்பால் கண்டுகொடு

கஅ பத்தாதுமாத மதில்பாவைவயிறுளொக்கில் சித்தாக
எத்தாகும்சர்க்கரையிலுபபைபூ

கக நீரில்அரைத்துப்பாவில் நினைவாகதான்அருந்த கூறும்
பேருமத்திநதோர்க்குப் பேசுவேன்

வயிற்றில்பிள்ளை மத்திக்குபோனால் வீழமருந்து.

உ0 அறிந்துநிலக்குமிழ்வேர் அரைத்துக்கரைத்து வகையில்
விரைந்துகுடிக்கப்பிள்ளை வீழுமே

உக அருள்உரைத்த தறிந்துமுனிதானுரைத்த
திறமாகும்என்றிதனைச்செப்பு,

உருதரிக்குமிலக்கணங் கூறுகின்றார்.

அறுசீராசிரியவிருத்தம்,

ஆகநாள்வித்துவிட்டஐந்தாநாள் கடுகுபோலாம்
போகாரைந்தாநாளில் பொருந்தியமுட்டைப்போலாம்
ஏகமாதத்தில் பிண்டம் இரண்டினில்மார்புமட்டாம்
பாகமாய்மூன்றுந்திங்கள் பகர்உந்திமட்டுமாமே. (உஉ)

மட்டுடன்நாலாந்திங்கள் வளர்ந்திடும்பாதமெங்கும்
கட்டுடன்ஐந்தாமாதம் கருதுபூரணமாம் ஆறில்
தட்டுடன்எலும்புசிவன் தலைமயிர்நரம்புஏழாம்
எட்டுடன்அறிவாம்ஒன்ப தியல்தசம்பிறவிதானே, (உங)

மாதாபிதாவால்பிள்ளைக்கு வருநோய்கூறுகின்றார்.

எண்சீராசிரியவிருத்தம்,

பிறந்தபிள்ளைக்குந்தானேதந்தாய் பிதாவாலே சிசுவுக்குமேலே தோன்றும், சிறந்தபிணிமாந்தகணங் கரப்பான்தோஷம் தீதானஅக்கினிகள்கிரந்தியுண்டாம், அறந்தழைக்குமருத்துவச்சியாலேதீரும் அது அன்றிமருத்தறிவர்அதனால்தீரும், திறந்தெரிந்துபார்த்துவிடுஞ் சிறுபிள்ளைக்குச் சீராகவருநோய்கள் செப்பக்கேளே, (உச)

செங்கிரந்திக்கருங்கிரந்தி செவ்வாப்புத்தான் தியானக்காப்பானும்அனையிற்சானும், அங்கமெல்லாஞ் செவ்வாப்புச் சிவந்துகாணும் அதுஅன்றிக்கருங்கிரந்தி தொண்டைக்கட்டும், பிங்கிரகம்பேய்த்தோஷம் பட்சித்தோஷம், பின்னுமெவருரோகங்கள் பிரிந்துச்சொல்ல, அங்சிரிதாகுழந்தைபிணியறிந்துதீர்க்க, ஆராலுமாகாதென் றான்சொன்னனே. (உ௫)

சொல்லுகின்ற குழவிக்குக்காப்பானேது தோஷமென்ற வினையேதுமாந்தமேது, சொல்லுகின்றகணைமேது அங்காங்களேது கூறுமவைசூரியென்றக்குளறலேது, புல்லுகின்ற தாயாலே தந்தையாலே புனைந்துகொடி படர்ந்ததுபோல்படர்ந்திருப்பால், சொல்லுகின்றகாப்பானுங் கர்ப்பமேகம் கோதுற்ற தோஷமெல்லாம்மூலப் பாலகருடே

கூடானமாந்தமெல்லாந் தாய்ப்பால்மந்தம் தொனையான கணங்களெல்லாங் கர்ப்பசூடு, பீடான அங்காங்கள் எல்லாந்தாயும் பிதாவிருவர்புணர்ச்சியினால் எழுந்தசூடு, பாடான வைசூரியெல்லாம் அநுபோகத்தால் படர்ந்துநிந்தவினையெல்லாங்கர்மத்தாலே, காடானவகைபோலேசொன்னதற்குக் கண்டுவருந் தோற்றம்பிணிகழறுவேனே. ()

குழந்தைகளைநோய்கள் வாதிக்குங்காலங் கூறுகின்றார்,

கழறுனகாப்பான்தான் பிறவிநோக்கிக் கண்டமுதல் நாள்தொடங்கித்திங்கள்மூன்று, புழறுனகுழவிகளை வதைக்குங்காலம் புணர்ந்தபலதோஷமெல்லாந் திங்கள்மூன்று டழறுமகாள்தொடங்கிவருஷம் ஒன்று, பதைபதைக்கக் குழவிகளை வதைக்குங்காலம், சிழறுமாந்தமெல்லாம் வருஷந்தொட்டுச் செறிமூன்று வருஷமட்டும் வதைக்கும் என்னே, (உ௮)

என்னவேகணைமூன்று வருஷந்தொட்டு ஏழாண்டுமட்டுக்கும் இருக்குங்காலம், பன்னவேஅங்காங்கள் ஏழாண்டுதொட்டுப் பகர் முப்பதாண்டுமட்டும் படருங்காலம், உன்னவே வைசூரிரோகமெல்லாம் உயிர்பிரியுங்காலமட்டும் உரித்துதானென், றின்னவே முன்னூலில் முனிவர்சொன்ன இயல்புகண்டிந்நூலில் சொன்னதாமே. (உ௯)

பிள்ளைபிறந்தவுடன் சீறிசீறியழுதால் விக்கல்

பொருமலுக்கு மருந்து.

தீருமேதிங்கள்சென்று பிள்ளைப்பெற்றால் சீறியழும்பாலகர்க்கு மருந்துகேளு கூறுடனேசிறுதேக்கு திப்பிலியுங்கூட்டிக் குறுகவே பொடிசெய்தேன் ஆவிநெய்யில், வேறுபட கொங்கைபிள்ளை யுண்ணு

ம்போது விக்கல்போம் பொருமலுடன்விஷமும்போகும், பாருடனே திப்பிலி சோகணியுங்கூட்டிப் பருவமுடன் நெய்குழைத்து தனத்தில் பூசே. (௩௰)

பிள்ளை வயிறுவீங்கினால் குடித்தபாலெதிரிட்டால் கோட்டாவிவிட்டால் மருந்து.

பூசுவாய்பிள்ளையுடவயிறுவீங்கில் பொடிமதுரங் காடியனைப்பூச த்தீரும், கூசியேகுடித்தபாலெதிரிட்டாலும் கோட்டாவிவிட்டாலும் கூறக்கேளு, பாசமுள்ளவெள்ளுள்ளி அசமதாகம் பரிவுடன் சியாமு ம்வைத்து பருகதீரும், தோஷங்கண்டெச்சமுலை யுண்ணுதாகில் துல ங்கவே அதிமதூரம் பொடியதாக்கே. (௩௧)

பிள்ளை வயிறுநொந்தழுதால் மலங்கட்டினால்மருந்து.

பொடியாகப் பால்அரைத்து முலைக்கண்பூசிப் பிள்ளைஸ்தனம் உ ண்ணவே போகுநோயும், அடியாய்ச்சேய் வயிறுநொந்து அழுதுதா னால் துலங்குபுன்னை சிறுதேக்குங் கோஷ்டங்கொண்டு, வடிவாக நீர் அரைத்துக் காய்ச்சியேதான் மைந்தனது வயிற்றில்பூச நோயுந்தீரும், அடிவயிறுநொந்துமலங் கட்டுமாகில் அதிமதூரம் பிசித்துளிர் சர்க்க ரையும்அரையே, (௩௨)

பிள்ளைக்கு சிறுநீர்இறங்காவிட்டால் தோஷங்கண்டால் மருந்துங் குளிசமும்.

அரைத்துநெய்யில் புகட்டிடவே மலம் இறங்கும் அதுவல்லால் நீரிறங்க எலிப்புழுக்கை, உரைத்திடுவாய் வெள்ளரிக்காய் விரையுங் கூட்டி உகந்தரைத்து அடிவயிற்றில்பூசவேதான், நிரைத்திடவேநீர் இ றங்கும்பாலும்உண்ணும் நினைவாகமஞ்சள் ஆத்திவேருங்கொண்டு, அ ரைத்திடுவாய் மஞ்சள்நூல்குளிசங்கட்டில் பறக்குமேதோஷமுடன் பலநோய்தானே. (௩௩)

எட்டுவிததோஷகுணம் கூறுகின்றார்.

செங்கிரந்தி கருங்கிரந்திபட்சிதோஷம் பறவை தோஷக்குணம் வெண்பா.

செங்கிரந்திதேகம் சிவப்பாம்கருங்கிரந்தி
பொங்கிமிடறுகட்டிப் போகுமே-நங்காய்கேள்
பேய்ப்போலேசீறியழும் பிறந்தபட்சியின்தோஷம்
நீஇப்பாவைதோஷத்தை நேர். (௩௪)

புள்ளுத்தோஷம் கற்பம்அழிந்ததோஷம்-குளிதோஷகுணம்,

நோய்த்திடுக்கிடுமே நின்றபுள்ளுத்தோஷம்
வாய்க்கழியும்பச்சை வாறுபோல் - நோய்

அளிதோஷங்கால்பின்னும் ஆருமதுவாந்திக்
குளிதோஷம்ஆமென்றே கூறு. (௩௫)

தேரைத்தோஷம்-முட்டுத்தோஷம்-பெண்தோஷக்குணம்,

கூறுமதுதேரைக் குணந்தேகந்தான்வற்றும்
மாறுமுட்டுத்தோஷமுலை மறக்கும்-வீறுடனே
பெண்தோஷந்தான்மயக்கும்போகுமெட்டும்
கண்பாருக்தோஷத்தை நாடு, (௩௬)

(எண்வகை மாந்தகுணம் கூறுகின்றார்,)

மாந்தம்-செரியாமாந்தம்-தலைமாந்தம்-போர்மாந்தக்குணம்,

நாடுதனில்மாந்தம் நன்றாய்வயிறுபோம்
தேடுசெரியாமாந்த சேதிகள்—ஓடகடு
மாக்கனைத்தால்போல வலிப்பாந்தலைமாந்தம்
காக்கப்போர்மந்தத்தைக் காண். (௩௭)

கட்டுமாந்தம் விஷமாந்தம் நீர்மாந்தகுணம்,

காணவயிறுபோம் கட்டும்அதுமந்தம்
வானம்போல்உப்பி மலம்போகா—தான
விஷமாந்தம்மெய்விரைக்கும் மேலேயிகவெதும்பும்
இசையாய்நீர்மாந்தம் இயம்பு. (௩௮)

கழிமாந்தக்குணம்,

இயம்புவதுமேனி எங்குங்குளிர்ந்திருக்கும்
நியம்புகழிமாந்தத்தின் சேதிகேள்-சொயம்பி
பலவிதமாய்தான்கழியும் பார்க்கில்இவைஎட்டும்
உலகில்இதுவெவ்வே றுரை (ஆகமாந்தம்-அ) (௩௯)

(எண்வகைகணங் கூறுகின்றார்)

(கணம்-மஹாகணம்-கழிகணம்-சுழிகணக்குணம்).

உரையாய்க்கணங்காயும் உண்மைமஹாகணந்தான்
நிரையாய்உதடுவெடி நேருமே - குறைசேர்
கழிகணந்தான்வயிறுபோம் காணவிவைஇரண்டும்
சுழிக்குங்கணமெனவே சொல், (௪௰)

வாட்கணம்-நீர்க்கணம்-முக்குக்கணம்-மூலகணக்குணம்,

சொல்லாய்வாட்கணந்தான் சுரம்அஸ்தியில்நிற்கும்
செல்லாய்நீர்க்கணம்வேர்வைச் செய்யும்-நல்லாய்கேள்
முக்குக்கணமுக்கும் மூலகணஞ்சீதரத்தம்
தக்கும்அடிதள்ளுந் தான் (௪௧)

(ஆமகணம்-ஆமசன்னி-ஊதுகாமாலை மஞ்சட் காமாலைக்குணம்)

தானலரும்ஆமகணந் தையமேலஆமசன்னி
ஊனமுறநெற்றிச் சுழியுண்டாம்-தேனேகேள்
காமாலைஊதும் கருதுமஞ்சட்காமாலை
மாமூத்திரம் மஞ்சள்நிறமாம். (சூஉ)

இனி இவைகளைத் தனித்தனி விளக்குதும்

கிரந்தி வரும்விதங் கூறுகின்றார் - வெண்பா.

எல்லாக்கிரந்தி யெழும்வாதபித்தப்
பொல்லாதசேஷ்மத்தால் பொங்கிவிடும்-வில்லான்
நீள்புருவத்தாளே நிறைந்துசெயற்காபான்
வழ்புவியோர்க்கென்றே யியம்பு. (சுரு)

செங்கிரந்தியின்குணம்-அறுசீராசிரியவிருத்தம்.

பிள்ளைப்பிறந்தவுடன்அழுதுப் பிறகுமிடறுநனைக்கட்டி
மெள்ளப்பூனைக்குரல்போன்று விடாமல்நீர்மயிறாதித்
துள்ளிக்கைகால்சிவப்பேறிச் சும்மாய்க்கிடக்கும்எதென்னில்
கள்ளமானசெங்கிரந்திக் கருத்தாய்இதனைக்கண்டுகொளே. (சுச)

செங்கிரந்திக்கு மருந்துங்குளிப்பாட்டவுமருந்தும்

கோரோசினைதான்முலைப்பாலில் கொடுக்கக்கற்பூரவள்ளியிலை
நேரோடுஉள்ளித்தனைநறுக்கி நிகருங்குன்றிமணியிலையின்
சாறும்அருந்தமுருங்கயிலைத் தன்சாறுந்தசெங்கிரந்தி
தீறும்செம்முள்ளியினிலையைத் தினமும்நீரில்குளிப்பாட்டே (சுரு)

கருங்கிரந்தியின்குணம்,

முழங்கஅழுதுமுலையுண்ணு மூர்ச்சையாகும்உடல்வெதும்பும்
கொழுங்கண்திறவா வாய்வாட்டிக் கொண்டேஅதராங்கறுப்பேறும்
அழுங்கிஅலறும்குரல்கம்மும் அதிகமாகவயிறூதும்
புழுங்கும்வலிக்குங் கருங்கிரந்திப் பொல்லாதெனவும் புகன்றனரே.

(கருங்கிரந்திக்குமருந்து)

ஒன்றன் இரத்தம்காளவாயன் உகந்தபாலுந்தான்கொடுக்க
மூன்றுகரியகத்தபத்தின் மூத்திரம்அவுரிச்சாறுசமன்
நாலுவசம்புஉள்ளியுமாய் நறுக்கிரண்டெண்ணெயுடன்
ஆறல்எரிந்துங்கொடுத்திடுநீ ஆறும்காயகிரந்தியதே (சுஎ)

கருங்கிரந்திக்கு எண்ணெயுங் குளிப்பாட்டவும்

எண்சீர் ஆசிரியவிருத்தம்.

நெய்யுடனே விளக்கெண்ணெய் நல்லெண்ணெய்க்கூட்டி, நீடுஞ்சங்கிலைச்சாறு சமனாய்விட்டுத், தீய்யாமல் கடுகம்தான்நீர் அனைத்துந் நீந்தில்லா மவியில்வடித்தேயெடுத்துப், பையவொரு பணவெடைதான் உட்கொடுத்துப் பாலுடனே மேலெங்குந் தடவிவைத்துச், செய்யமுள்ளிக்கிரந்திநாயகம் நீர்ப்போட்டுத் தினமுமேகுளிப்பாட்டத் தீருமென்றே, (௪௮)

கருங்கிரந்திக்கு எண்ணெ உள்ளுக்குமேலுக்கும்பூச,)

மூக்கரைச்சாரணை முடக்கொத்தான் செந்நெருஞ்சில் முத்தெருக்கஞ்செவியினுடன் ஓரிதழ்தாமரையும், ஆக்கமுடன் கருள்ளிமயிலிறகுங்கூட்டி ஆமணக்கெண்ணெயில் எரித்துள்கொடுபின்பு, தாக்கிமேல்பூசியிடவந்தவலியிற்கும் தாயையும் பத்தியம் சமாசம்வைக்கப், பூக்கமழுங்குழல்மடவாய் உமைக்கான்புகன்ற புகழூனையு மிதுவாகும் புவியிலுள்ளவர்க்கே, (௪௯)

பன்னிரண்டுகிரந்திக்கும் பதினெட்டுக்கூலைக்கும் எண்ணெ

ஆசிரியவிருத்தம்.

அண்டபகிரண்டமுதல் கொண்டுமனுவிண்டுதொழ ஆமணக்கெண்ணெயதுசேர், அடவானதேங்காயைத் திருகிமுன்பாலெடு அவிர் செம்பரித்திச்சார்சேர், கண்டதொருபாண்டங் கலந்திடப் பேற்றியே காய்ச்சிவடியெண்ணெயதிலே, கற்கம் இனிவர்க்கமொடு சுக்கதுகிராம்புடன் கனிவாயுகந்தலம், கொண்டசிறுதிப்பிலிச்சண்டமாருதபூங் குன்றுமிளகுப்பொடியதாய். குறையாமல் இவ்வகை வகைக்கேவிருகவெடை கூட்டிவிடும் எண்ணெயதிலே, இரண்டடி ஒருசங்கு தந்த குழவிக்கிய எகுநோயானவகைகேள், ஈராறுகிரந்தியும் அறுமூன்று கூலையும் ஏங்கியோடிப்போகுமே. (௫௰)

தீராத அசாத்திய கருங்கிரந்தியின்குணம் தன்வந்திரி

எண்சீராசிரியவிருத்தம்.

பாரோநீகருங்கிரந்திக் குணம்எதென்றால் பனிபோலேசீழியமும் முலையுண்ணாது, ஆரோதான்முறிமுறித்து உடலும்விம்மும் அரியநாவரட்டியுடன் கண்விழிக்கும், வாரோதான் மலர்முமுமும் வாடிக்காணும், வல்வினையாய்க்குக்கில்புழு விளையும்பாவம், மாரோதான்மைந்தன் அஞ்சுநாளில்சாவும் மகாகொடியது கருங்கிரந்தியுனாத்தோம்நாமே (௫௧)

கிரந்திவகுப்பு - முற்றிற்று.

இனிதோஷம்வருமாறு
அகஸ்தியர் திருவடிகளேசரணம்,
தோஷவகுப்பு-பட்சித்தோஷகுணம்.

அறுசீராசிரிய விருத்தம்.

உதகமாய்க்கழிவதன்றி உவாந்திபு மிகஉண்டாகி
இதமொடுதலையெடாமல் இருகண்ணில்பீளைக்கட்டி
விழவிழமாகமேனி வெதும்பியேபேய்போல்சீறும்
பதமிகுமுனிவன்சொன்னப் பட்சியின்தோஷந்தானே (௫உ)

பெருகிவயிறுதான்போகும் பேதஉடம்புங்கண்குழியும்
பெருத்தகழுத்தும்முநஞ்சிறுக்கும் போரானகுரல்போல்சிறியழும்
அருவிமுலையும்உண்ணாது அலறுந்தண்ணீர்க்குடியாது
பருவமிடையோன்தான்அரியப் பகரும்பட்சிதோஷமிதே, (௫௩)

(பட்சிதோஷநிவர்த்தி குளிசமும் மருந்து)

பட்சியின்தோஷந்தீரப் பனையின்வேர்குளிசம்ஆடி
உச்சிகமணிந்தங்காளி உகந்திடும்வேரோடுள்ளி
பிச்சியின்வேருடெண்ணைப் பிசைகதிர்புடமேசெய்து
உச்சியில்இட்டுப்பின்னம் உள்ளுக்குங்கொடுத்திடாயே, (௫௪)

இதுவும் பட்சிதோஷநிவர்த்தி குளிசமும் சாந்தியும்
தன்வந்திரி-எண்சீராசிரியவிருத்தம்.

காணவேசெப்பொடு தகடுவாங்கிக் கண்மணியே எண்கோணம் அதன்மேல்வட்டம், பூணவேசிங்கியும்திபுஞ்சவ்வும் பூட்டியேஎண்கோணம் அதிலேயூன்று, தோணவேநான்சொல்வேன்தருமமாக ஞாக்கானஐபுமென்று நடுவிற்போடு, மாணவேபோட்டதிலே பஞ்சநூலால் மகிமையாய்ச் சுற்றிநன்றாய்க் குளிசம்ஆடே, (௫௫)

ஆடுகிற உழுந்தோடுஅரிசிப்போட்டு அச்சமறசமைத்து ஒருபாண்டந்தன்னில், வாடுகிற எருக்கிலையில்சாதமவைத்து வளமாக மூவிளக்கு மாவால்ஏற்றி, நாடவேமந்திரத்தால் நூற்றெட்டோதி நயமாகசாந்திசெய்துக் குளிசங்கட்டிப், பாடுகிறதில்லையந்தான்பட்சித்தோஷம் பலத்தநோய்ப்பறந்தோடும் வித்தைத்தானே. (௫௬)

(பறவைதோஷகுணம் அறுசீராசிரியவிருத்தம்)

குஞ்சியின்உடம்புநொந்து குடல்தனில்பாலுந்தங்கா
நெஞ்சையுஞ்சுரியாய்வாங்கும் நெற்றியும்வலிப்புண்டாக்கும்
அஞ்சிடும்போதுசற்றே துணைக்கெனவலித்துச்சீறும்
பஞ்சின்மெல்லடியினாளே பறவையின்தோஷந்தானே (௫௭)

குடித்தபால்எதிரொடுக்கும் குழிந்திடுந்தலையுங்கண்கள்
அடிக்கடிநடுக்கிட்டேங்கும் அகமதில்தாகமாகும்
எடுத்திடக்கையில்தங்கா எதிரிளைப்பெடுக்கும்பிள்ளை
கடுத்துடன்வயிறுபோகும் கருதுநீபறவைதோஷம் (௫௯)

தன்வந்திரி.

உச்சிமுனைத்ததனைப்பற்றி உடலம்எங்கும்வெதுப்புண்டாம்
எச்சமாகநாவலர்ந்து இரண்டுகண்ணும்வெளுப்பெய்தும்
பச்சைமஞ்சள்முறித்தால்போல் பசும்பொன்னிறமாம்முகமினுக்கும்
இச்சைப்புரியுங்குழல்மாதே இதுவேபறவைதோஷமென்றே, (௫௯)

பறவைதோஷத்துக்கு குளிசமும் கியாழமும்,

மறவையின்தோஷந்தீர பயன்உரைத்திடுவேன்இந்த
துறையைநீகேளாய்ஆவின் துளிர்தனைக்குளிசம்ஆடித்
திறமைசீரகம்மிருள்ளித் திசம்வாப்பூவைவேரும்
உறவதாய்க்காய்ச்சியேதான் உறுபிணிக்குழவிக்கீயே, (௬0)

இதுவும் பறவைதோஷநிவர்த்தி-தன்வந்திரி.

வருத்தம்வெள்ளைக்குன்றியதை வளமாய்ப்பலியும்பொங்கவிட்டு
மறுத்தசாபம்நிவர்த்திசெய்து மகிமைவடக்கின்வேர்வாங்கிக்
கறுந்தசெவ்வாய்நாளதுகான் கனகமதனிற்குளிசமிட்டுக்
கருத்தக்குளிசமதுகட்டிக் கழிப்புங்கூடக்கழிந்திடுமே, (௬௧)

எட்சித்தோஷகுணம்,

தேயும்உடம்புமிகநாறும் செல்வன்முலைப்பால்மறந்திருக்கும்
தாயைக்கண்டாலொவ்வாது சற்றேவயிறுநாறெழுகும்
பாயும்புலிபோல்பதறியழும் பாலனைக்கண்டால்பார்த்திருக்கும்
பாயும்விடையோன்தான்அறியப் பகராய்எட்சிதோஷமிதே (௬௨)

வித்தாந்தேகமிகநாறும் மெல்விமுலைப்பால்அருவருக்கும்
சற்றேவயிறுதான்கழியுஞ் சண்டாளம்போல்சுரங்காயும்
தத்தந்தாயைக்கண்டாலே தவனம்அதுவாய்சீறிஅழும்
மற்றிங்கண்ணைப்பிசைபிசைந்து மண்ணில்பிரளும்பாலனதே (௬௩)

மண்ணில்புரண்டேமண்ணைப்போல் மடிந்துமடிந்துதான்புரளும்
சன்னிக்குணமாம்மோந்தமிது தான்சண்டாளசிசுரோகம்
வெண்ணிவேததன்வந்திரி விளம்பும்இந்நோய்க்கண்டுக்கொள்க
எண்ணிப்பறக்கும்பட்சியென்ற இயல்பாந்தோடமிதுதானே. (௬௪)

எண்சீராசிரியவிருத்தம்,

போமேதான்எட்சித்தோஷ குணந்தைக்கேளு போனஉதிரத்தில்குடிகொண்டு, வாமேதான்மயக்கிவித்துத் தலைபெடாமல் வாண்டுமேகண்பீளைக்கட்டிமூடும், காமேதான்உடல்வற்றிக் கனலேமீறுங் கற்மாதிவினையிதுதான் செகடெல்லாம், ஆமேதான்விதவிதமாய் மேனிவற்றும் ஆகவுநீஎட்சித்தோஷ குணந்தான்பாரே, (௧௫)

எட்சித்தோஷநிவர்த்தி குளிசம்

அறுசீராசிரியவிருத்தம்,

தானேசுக்கிரவாரமதில் தனித்தஅகுவகெந்தித்தான்
மானேகாப்புமீந்திட்டு ம-ந-சி-வ-ய வென்றுருவேற்றுப்
பானேநூற்றெட்டுருவேற்றிப் பண்பாய்வடக்கின்வேர்பிடுங்கித்
தேனேபட்டுநூல்குளிசமிட்டுத் தேவிநிறுத்திஅருகில்வையே, (௩௬)

வையேபூசைநேமமதாய் வாழைக்கனிகள்அறுபடைத்து
துய்யச்செம்பில்சலமொண்டு தோஷநிவர்த்தித்தான்செய்து
தையல்தேவிதனைநினைத்து தண்ணீர்ஓதிதான்தெளித்து
மையக்குளிசந்தனையெடுத்து மைந்தன்தனக்குக்கட்டிவிடே, (௩௭)

எட்சித்தோஷநிவர்த்தி வேறுகுளிசமும் குளிப்பாட்டவும்

எண்சீராசிரியவிருத்தம்,

வேலமரப்புழுக்கூட்டில்தன்னிநூல்சுற்றி விளங்குமஞ்சள் அதுபூசித் தூபங்காட்டிச், சாலவுமேமுக்குளநீர் மந்திரித்துத் தலைமீதே சொரிகநீஆலம்விழுதைப், பாலனுக்குக்குளிசங்கட்டிக் கோழிப் பலிக்கொடுத்துத்தலைச்சுற்றி அப்பால்போட்டு, மேலுக்குநிலவிளா ஆதல்வில்வ இலையாதல்போட்டுக் குளிப்பாட்டநன்றே, (௩௮)

எட்டுவகைப்புள்ளின் பெயர் கூறுகின்றார்

அறுசீராசிரியவிருத்தம்,

வீங்குப்புள்தூங்குப்புள்ளும் விளக்கொளிக்கண்ணன்வெங்கண்ணநீங்குசொல்கருடக்கண்ணன் செங்கண்ணன்வரட்டுப்புள்தோஷம்
பாங்குடன்தொடுபேய்க்கண்ணன் பட்டதோர்எட்டுப்புள்ளும்
ஈங்குள்ளக்குணங்கள்கண்டால் இன்னமும்இசைக்கின்றோமே, (௩௯)

வீங்குப்புள்ளின் தோஷகுணம்,

உச்சியுங்குழிந்துநாவு உலர்ந்திடும்உவாந்திப்பண்ணும்
பச்செனமலமுந்தானும் பாலதுபோலஆகும்

பிச்சுடன் எடுக்கும்பாலும் பின்னையால் முகந்துடைக்கும்
திட்செயம்வீங்குப்புள்ளின் திகழ்குணமென்றுசொல்லே, (௭௰)

வீங்குப்புள்தோஷகுளிகை,

மதாமுத்தம்அதிவிடையம் மாசேனகடுக்காய்வசம்பு
உதிருந்தேவதாரமஞ்சள் உடனேவகைக்குழாளவாய்
அதிருங் குரிஞ்சிப் பொடிகலச்சாறதனை யரைந்துஉண்டைசெய்து
சதிரமுலைப்பால் தன்னிலிடதணியாதோஷந்தணுந்திடுமே, (௭௧)

தூங்குப்புள்ளின்தோஷம்.

வாங்குந்தாகம்நீர்குடிக்கும் வயிறுங்கழியும்வாந்தியுமாம்
பாங்காய்த்திரும்பிமுகம்பார்க்கும் பயமாய்அழுதவிரென்னும்
தூங்கித்துஞ்சிப்பாயல்மிசைச் சோர்ந்தேயலறி எழுந்திருக்குந்
தூக்கிப்புள்ளின்தோஷமெனச் சொன்னார்அரனார்தோகைக்கே (௭௨)

அரண்டெழுந்திருக்குஞ்சோரும் அருந்தியஎல்லாங்கக்கும்
இரண்டிடும்கண்கள்தானும் இமையின்மேல் சொருகிக்கொள்ளும்
முரண்டெழும்வீரிட்டேதான்மூர்ச்சமாய்ப்பல்கடிக்கும்
சுருண்டுதான்கீழேநோக்கும் தூங்குப்புள்தோஷந்தானே, (௭௩)

தன்வந்திரி.

ஓடும்வரக்கம்மயக்கமுடன்ஓகோஉவாந்திவயிறிழியும்
பாடுஞ்சிசுப்பள்ளமதாய்ப் பாக்காய்மேல்மூச்செறிட்டு
வாடும்பாலன்எக்கோம் வகையாய்அழுகும்முகம்வெளும்
சூடும்மலர்வேல்விழியாளே! தூங்குப்புள்ளின்தோஷமிதே. (௭௪)

தூங்குப்புள்ளின்தோஷநிவர்த்தி.

தோஷந்தணியசோசினையும் தூவுமஞ்சள்வசம்பேலம்
வாசவேப்பின் ஈர்க்கோடு வகையாய்ஓமம் விளாவோடு
பாசமதுவாய்அரைப்பனைத்துப் பாலன்றனக்குமுழுங்காட்டிக்
கோசமதுவாய்த்தூற்றிட்டுக் குணமாம்சாந்தித்தான்செய்யே. (௭௫)

இதுவும்தூங்குப்புள்ளின்தோஷநிவர்த்தி,

வல்லால்சிறகுதன்னில்ஊமத்தின் அருகம்வேர்சுருட்டிச்
செவ்வாய்க்கன்னிப்பெண்நூற்ற நூலால்சிறகுதனில்சுற்றிக்
கவ்வாய்ப்புனலும்சொரிகுளிசம் கட்டிக்கோழிப்பலிகொடுத்து
நவ்விவிழியாய்க்கூவிளவேர் நன்றாய்அரைத்துப்புகட்டுகவே. (௭௬)

விளக்கொளிக்கண்புள்ளின்தோஷம்.

குடித்தபால்எடுக்கும்மெய்யும் கூர்மையாய்க்காயும்ஐயும்
அடிக்கடிக்காயும்அன்றி அறியதாய்ச்சிந்தைநோக்கும்
பிடித்துநல்முலைஉண்ணாதுப்பெருவிடாய்க்கொண்டுச்சோரும்
விடுத்திடும்எழுந்தநோய்தான் விளக்கொளிக்கண்ணன்தானே, (௭௭)

மேலெல்லாம்நரம்புதோன்றி மேனியும்வெளுத்துகாணும்
ஆலமேயுண்டகண்ணே அந்திப்புள்தோஷந்தானே. (கூஉ)

(அந்திப்புள்தோஷநிவர்த்தி.)

வருக்குந்துவாலைதனக்கேளு மானேயின்னிவிளாநொச்சில்
பருக்குஞ்சிந்தில்தான்வேம்பு பையநாயுருவிசம்புள்ளி
நொருக்கித்துவளைத்தானிடித்து துவாலைக்கண்டங்கால்தன்னில்
இறுக்கமுடிந்துகட்டிடவே விரைந்துதோஷம்போயிடுமே, (கூங)

(நீர்ப்புள்தோஷம்)

நெஞ்சுவரண்டுகண்குழிந்து நீடும்பெருமூச்சுண்டாகி
பஞ்சுபோலேகண்வெளுத்துப் பாலுங்குடியாதேயலறி
துஞ்சாதிறவுபகலுந்தான் சுருங்கப்பண்ணியிகவேர்க்கும்
செஞ்சொற்கிள்ளை மொழிமாதே செய்யநீர்ப்புள்தோஷமிதே. (கூச)

(நீர்ப்புள்தோஷநிவர்த்திஎண்சீராசிரியவிருத்தம்)

பச்சோந்திதன்னைஹ்ரீங்காரஞ்சொல்லிப் பாங்குடனே பிடித்து வந்துமஞ்சள்நூல்சுற்றி, அச்சமறபுறமடைநீர்வழுதாஞ் சொரிந் தழு கானசெஞ்சேவல்பலிகொடுத்து, நிட்செயமாய்இயந்திரம்கட்டித் திரு ம்நிகானமருந்துதனைநிகழ்த்துங்காலை, வெச்சணவிஷ்ணுக்கரந்தை சிற ங்கூட்டிவேறேநீர்க்கொடுத்திடவேவியாதிபோமே. (கூரு)

இதுவும்நீர்ப்புள்தோஷநிவர்த்தி தன்வந்திரி

(அறுசீராசிரியவிருத்தம்)

தோதமுதலைக்கொழுப்போடு துருவவட்டதுத்தியின்வேர்
மாதேயிதனைக்குளிசமிட்டு மருவப்போட்டுக்கட்டினபின்
ஓதேதோஷமந்திரத்தால் ஒருநூற்றெட்டுச்செபித்திடுவாய்
பாதேநீர்ப்புள்தோஷமது பயந்துபறந்துஓடிடுமே, (கூசா)

(புள்ளின்தோஷம்)

உச்சிக்கண்ணுந்தான்குழியும் உண்ணும்பாலுந்தங்காது
பச்சைநிறம்போல்வயிறுவிடும் பறவைக்குறல்போல்சிறியழும்
எச்சம்இளைக்குந்தண்ணீரை எடுத்துகுடிக்கும்மெய்மறக்கும்
கச்சையணிந்தமுலைமாதே காணும்புள்ளின்தோஷமிதே, (கூஎ)

(புள்ளின்தோஷநிவர்த்தி)

புள்ளின்தோஷந்தீர சிறுபுள்ளடிவேர்க்குளிசஞ்செய்து
மெள்ளஓரிதழ்தாமரையும் வெந்தயமுடனேவிடத்தேரும்
எள்ளத்தோராளவாய்மிளகும் இதமாயதனைக்குடிநீராய்
உள்ளத்தோர்மனதாகியநீ உண்டிடநன்றெனஓதுமிதே. (கூஅ)

புருஷதோஷம் தன்வந்திரி

போமேஉச்சிக்கண்குழியும் பொருந்துண்பா லுந்தங்காது
போமேவயிறுபசசென்றுப்பொருமியழுகும்பறவைகுறல்
தாமேகுறுகும்ஒருவேளைத் தனியேதனியேசிறியழும்
காமேகறுத்தக்குயிலாளே கருவால்புருஷதோஷமிதே, (கூகூ)

புருஷதோஷநிவர்த்தி எண்சீராசிரியவிருத்தம்.

புருஷனென்றஉடம்பினுடை நாக்குவாங்கிப் புகழானஎருக்கனூர்க்குளிசமாடிப், புருஷனென்றதாம்பூல முன்னேவைத்துப் புதுமையாய்ப்பூசைசெய்யச்சொல்வேன்கேளு, புருடனென்றநயவசிம நூற்றெட்டோதி பூமுலையாய்ப்பாலகர்க்குக்கட்டுக்கட்டு, புருஷனென்றகுழைந்தைகட்குக்கட்டும்போது புகழ்பலிஒன்றுகொடுக்கதோஷம்போமே.

(பெண்ணின்தோஷம்)

அறுசீராசிரியவிருத்தம்.

நெஞ்சுவாண்டுகட்குழிந்து நீடும்பெருமூச்சுண்டாகிப்
பஞ்சுப்போலேகண்வெளுத்துப் பாலுங்குடியாதேயலறித்
துஞ்சாதிரவும்பகலுந்தான் சுருங்கித்தேகமுநம்வேர்த்துச்
செஞ்சொன்மயக்கமுண்டாகில்செப்பும்பெண்ணின்தோஷமிதே, ()

பெண்ணின்தோஷகுணம் தன்வந்திரி.

அறிவையர்க்கும் ஆண்பிள்ளைக்கும் அதனில்தோடமேதென்றால்
கருவாம் அஞ்சுமாதத்தில் காணில் கலந்த தாய்முகந்தை
பெறுவாள் அந்தப்பிள்ளைக்குப் பேணில்சுருக்கும் வயிற்றுவலி
கருகுமுகமும் பேயின்குணங் கண்டேயறிந்துச்செய்வீரே. (ளஉ)

பெண்ணின் தோடநிவர்த்தி

எண்சீராசிரியவிருத்தம்,

செய்யவே பஞ்சவண்ண மலரெடுத்துச் சேகரமாய்ப்பஞ்சவண்ணமான அன்னம், ஐயமில்லா ஐந்துவெள்ளிப்பணமும்வைத்து அதனுடன் தீபத்துடபம்நெய்விளக்கு வைக்க தவியிலையில் உருளமுதிகானே வறைதோறுஞ் சாம்பிராணி வத்திகட்டு, பொய்யல்லகாணசொன்னேன்பண்டிதர்க்குப்பொதுவாக மூச்சந்தி அதில்வைப்பீரே. (ளஙு)

வைத்திடவேதோஷமெங்கே கிரகமேங்கே வலியெங்கே நோயெங்கே பறந்துபோகும், நைத்திடவேசிசுவுடையப் பருவந்தன்னை நாட்டமுடன் கண்டறிந்து கருத்திற்கொண்டு மெய்த்திடமாய்வதிஷ்டரைப்போல்பெருமைபூண்டு மேலானபத்மகுணஞ் சாருவோர்க்கு,

பைத்திடவே மோட்சமுண்டு நாகம்போச்சப் பாதகருங்கிருமால் தான்
இட்டிடாதே, (௱௪)

இதுவும்பெண்ணின்-தோஷநிவர்த்தி வேறு,

குளிசமும்-குடிநீரும்-கைகாலிற்கட்ட மருந்து,

பாவையின்தோஷந்தீர பரித்திவேர்க்குளிசமாடி
பூவைகேள் கஞ்சாங்கோரைப் புனஞ்சினிற் சாய்ச்சியேதான்
தேவைநீ குடிகேள்சின்னி சிறுவிளா வசம்போடுன்னி
மாவைசிலையில்முடிந்து மாறுகை காலிற்கட்டே. (௱௫)

முட்டுத்தோடம் தன் வந்திரி

அறுசீராசிரியவிருத்தம்.

போமென்றக்குழந்தைதமேனிப் பொன்னிறம் வடிவுவேறாய்
தாமென்ற வயிற்றில்பாலுந் தங்காமல் வாயால்போகும்
நாமென்றக் கண்குழிந்து நாக்குவாய்க் கருகித்தோன்றும்
காமென்ற மாதவிடையின் கன்னியமெடுத்துக்கூறே. (௱௬)

முட்டுத்தோட நிவர்த்தி

எண்சீராசிரியவிருத்தம்.

கூறானமுன்மந்திரத்தினாலேகுளிர்ந்தசலமொண்டு வேப்பிலையாலோது
ஊரானதாய்ப்பிள்ளையிருவருக்கும் ஆகியே யிருமெய்க்காச் சாந்திசெய்நீ
சீரானதிப்படியேயெழுநாள்செய்ய சிவசிவாயமந்திரமங்கோதாதெனக்கூறும் [illegible]
வேராகமந்திரமேயதல்லேவேறில்லை வெருவாதகிராணகிலமுடிப்போமே

குளித்தோடம் அறுசீராசிரியவிருத்தம்,

உச்சியுங்குழிந்திருக்கும் உயிர்விழி வளையமாகும்
மிச்சமாய் வாந்திசெய்யும் வேர்வையுமி வேகாறும்
பச்சுப்பச்சென்றுநாறும் பலபலவண்ணமாக
எச்சலாய்கழிச்சலுண்டாம் இதுகுளித்தோடந்தானே. (௱௮)

தன்வந்திரி வேறு.

பாரேஉச்சிக்கண்ணிரண்டும் பரிவாய்ப்பள்ளம் வீழ்ந்திருக்கும்
சாரேகழிச்சல் மிகவுண்டாம் தணல்போலதேகம்மிகக்காயும்
வாரேகுப்பம்புண்ணாகும் வளமாயுடலும்மிகவற்றும்
மாரேதுன்பமிகப்படும்பார் மயிலாள் குளித்துக்கண்டதுவே. (௱௯)

வேறு.

தண்ணீர்குடிக்கும்மெத்தகலரும் தளர்ந்துமிவ்வுடன் தானுலரும்
கண்ணீர்ச்சொரியுங்கால்வீங்கும் கழியுஞ்சத்தி மிகவுண்டாம்
அன்னமேநீ அஞ்சாதே அறிந்துசொன்னேன் குளித்தோடம்
பெண்ணேசட்டையிடத்தலைவேர் பிடுங்கிக்கட்டப்புழுப்பெறுமே, (௱௰)

குளிதோஷநிவர்த்திதன்வந்திரி

எண்சீராசிரியவிருத்தம்,

தோடமிதுதாழைக் குட்டிவிளாவேம்புசோம்புமஞ்சள்வசம்புட
னே சுக்குங்கூட்டி-வாசமிது அரைப்பரைத்து வைத்துக்கொண்டு ந
கையிலேபோட்டு நீர்க்காச்சியேதான்-தேசமிது தாய்ப்பிள்ளையிருவரு
க்குந் தெய்த்துமேமுழுக்காட்டிச் சொல்லுவேன்கேள்-பாசமிதுபுக்
கிணற்றின்தண்ணீர்கொண்டு பசுமஞ்சள் அரைத்ததிலேகலக்கிடாயே.

கலக்கிடாய்மஞ்ஞியும்பேயுஞ்சன்னமும் கண்மணியே அதுகாலை நூற்
றெட்டோதி, வலக்கிடாய்மேல்தெளித்துக் குடிக்கவொரு வாசமுறுக்கே
கமேபசும்பொன்னீசம், அலக்கிடாய குளிவேர்ப்பிடுங்கிவந்து அன்பாக
கப்பஞ்சதால்குளிசமாடி, வலக்கிடாய் பாலதுக்குக்கட்டிப்போடு மக
த்தானகுளித்தோடம் பறந்துபோமே, (௱௰உ)

இதுவுங்குளிதோஷநிவர்த்தி,

குளிதோடந்தான்றீ சடலைதனில் குளித்துமுன்னர்த்தறுகம்வேர்
க்குளிசமாடி-புளிதோடத்தினைபற்றிக் கிழக்காய்ச்செல்லிப்புகழும்மான்
பச்சரிசிப்புள்ளிதேறு-வளிதோடத்தினைபற்றும் வசம்புஉள்ளி வன்
சாறுகொடுத்துமேல்துவாலேசெய்யக் குளிதோஷம்வாத்தியொடுதாகந்
தீருங்குதுமுனிவதுவரைத்தபடிக்கூர்த்துசெய்யே. (௱௰௩

(இதுவுந்தோஷநிவர்த்தி)

கேளுநீகருடனுடக்கூட்டுக்குள்ளே கிடந்ததோர் முட்டைதனை
யெடுத்துவந்து ஆளவெட்டத்தினைச் சாம்பலாக்கி அழகாகக்குழந்தைக
ட்குத் திலர்தம்போடு - வாளவேழுன்கூட்டச்சாம்பல் மைத்துநுக்கு
நெற்றியிலிடமயக்கந்தீரும், காளவேகுளிதோஷம்பட்சித்தோஷந்தா
ன்பறக்குந் தப்பாதுதெளித்துச்செய்யே, (கக௪)

(இதுவுங்குளிதோஷநிவர்த்தி)

சொரிந்தாவின்நெய்உரியில் நல்லெண்ணெய்ப் பாதி சுகமானத
ன்றூரித்தண்ணீர்விட்டான், காய்ந்தபொன்றாய்கண்ணியுமேபலமொ
ன்றாகக் கழுஞ்சுவலைசிச்சீகமுங்கூட்டிப், பொருந்தவேதுளின்பால்
வார்த்ததைப் புகழுடிப்பில்லாற்றியேகாய்ச்சிக்கொண்டு திருந்தவே
குளிதோடம்போவதற்குஇதுகாண்டிப்புகட்டிடவே தெளியுங்காணே,

இதுவுங்குளிதோஷநிவர்த்தி அறுசீராசிரியவிருத்தம்.

ஓடந்தண்ணீர்காட்டாத்திஉயர்த்தபவுத்தியமற்றம்வேர்
ஆமேகுளிசமதுகட்டி-அன்பாய்சொரியும்புறமனைடீர்

போமேநோயிப்பலிகொடுத்துப் புறமாய்சுற்றிப்போட்டாக்கால்
தாமேகுழவிபிழைக்குமென்று நையற்சநார் சாற்றினரே. (௧௧௬)

இதுவுங்குளிதோஷநிவர்த்தி தன்வந்திரி,

வேப்பங்கொழுந்துப்பிடியொன்று மிளகுபத்துவசம்புசுக்கு
வாய்ப்பமலையைத்தான்தாங்கி வளமாய்சமனாய் அரைத்திட்டு
பாய்ப்பஅதனைவடித்திட்டு பாங்காயுள்ளேபுகட்டிடவே
வாய்த்ததோடங்கழிச்சல்களுமவயமாய்நிற்குங்கண்டாயே. (௧௧௭)

குளித்தப்பெண்கண்டதோஷம்

தன்வந்திரி

தாயின்முலையில்வாய்வைக்குஞ்சற்றேயுண்ணுநினைத்திருக்கும்
தேய்வாய்தேயும்மெய்வேர்க்கும் சிறுகவெதும்பும் வயிறுளையும்
காய்வாய்உறங்குஞ்சத்திக்கும் சற்றேநசென்றால்விரோசிக்கும்
பேய்நோய்க்கொண்டதலகுளித்துப் பெண்ணாள்கண்டதோடமிதே,

கனமாயிதனைக்கண்டுணர்ந்துகாலைமாலையிருவேளை
குணமாய்ஒதுசடாட்சரத்தைக்குறுநீர்அதனைமேல்தெளிக்க
வனமாய்விக்நோய்வர்க்கமெலாம்மாறிப்போகும்இதுதன்னால்
தினமும்வேண்டாம்மூவைந்து தினந்தான்தெளிக்கநொய்போமே. ()

குளித்தவள்எடுத்ததோஷம்,

மதலையின்மேனிவாடி வயிற்றினில்பாலுந்தங்கா
சதலையிற்குழியுண்டாகி சத்தியும்எடுக்கநீராய்
து...வினிற்சலமுநண்ணிநோக்கிவிழியுங்காழ்ந்து
குதலைவாய்க்கருகித்தோன்றுங்குளித்தவ ளெடுத்தக்காலே, (௱உ௰)

பாலகன்பவளவாயிற் ப..ியெனவேர்க்கும்மூக்கும்
ஆலகண்வளைபமாகும் அடிக்கடிவயிருபோகும்
காலதுபின்னிக்கொள்ளுங் கதறிபேயலறிச்சீறும்
சிலமாய்விரித்துத்தாவுந் தீதவளெடுத்தகாலே. (௱உ௩)

குளித்தவளெடுத்ததோஷநிவர்த்தி

எண்சீராசிரியவிருத்தம்,

ஆரியதோஇன்னமொருகிரியைக்கேளு அழகானபாலனுமேமெலிந்துவாடில். சீருடனேமாந்தகணதோடமெல்லாந் தெரிப்பட்டுப்போவதற்குசேதிக்கேளு, வேறுவகைதூதுவளைகுப்பைமேனி விளங்குகின்றக்குருவிச்சித்தும்பையோடு, நீருடனேவேருவகைகொண்டுவந்து நிட்செயமாய்க் குளிசம்நீர்நிகழ்ந்திக்கட்டே, (௧உஉ)

(இதுவுங்குளித்தவளெடுத்ததோஷநிவர்த்திவேறு)

சுட்டுவாய்நிருகுநள்ளிவடக்குவேரைக் காப்பிட்டு ஞாயிறுநாட் பிடுங்கிவந்து, சுட்டுவாய்க்குளிசமுடன் நீர்ச்சொரிந்து சுகமாகக்கட்டிடவேநோய்கள்தீரும், மட்டாகமூன்றுநாள்நீர்ச்சொரிந்து மதலைக்குச் சாந்திசெய்ய மயக்கந்தீரும் தொட்டிருந்ததோஷமெல்லாந்துடிக்கவே யோடுஞ்சொன்னபடிக்குளிசமும் சொரிந்திடாயே, (௧௨௩)

(இக்கிரியைமாந்தகணதோஷத்துக்குஞ்செய்க)

கர்ப்பம்அழிந்ததோஷகுணம் அறுசீராசிரியவிருத்தம்.

குடித்தபாலுந்தங்காது குஞ்சியுடம்புமிகநொந்து
பிடித்தநெஞ்சுயர்ந்தண்ணாந்து மிகவேநோகுஞ்சடநாறும்
படியுங்கைகால்அழுக்கேறிப்பணைத்துவருந்தப்படுமானால்
துடக்கும்சமனும்இடையாளே சொல்லாயழிந்ததோஷமிதே, (௧௨௪)

காலும்பின்னும்உடம்பிளைக்கும் கழியுஞ்சத்திமிகவுண்டாம்
மேலும்சிவக்கும்உடல்நாறும் விழியுஞ்சொருகிமிகமயக்கும்
வேலுஞ்சேல்போல்விழியாளே வில்போல்புருவமுடையாளே
கேளுமிந்தகுணங்கண்டால் கெர்ப்பம்அழிந்ததோஷமிதே, (௧௨௫)

(கர்ப்பம்அழிந்ததோஷநிவர்த்திகுளிசமுங்குடிநீர்)

கெர்ப்பமழிந்ததோஷத்தின் கிலேசந்தீரக்கிரியைக்கேள்
கர்ப்பகாட்டாத்தியின்வேரைக் கதிக்கவேகுளிசஞ்செய்து
அப்பப்பரித்திவேர்அரைத்து அருந்தக்குளிர்ந்ததண்ணீரை
கற்பப்பனையின்வெல்லமதைக்கரைத்துநீரில்கொடுத்திடுமே (௧௨௬)

(தேரைத்தோஷகுணம்)

தேனேர்மொழியாய்நீகேளாய் தேரைக்குணந்தான்இயம்புகிறேன்
ஊனேவற்றியுடம்புலரும் உவர்க்கநெஞ்சுதான்கூடும்
கானேகண்ணும்பொடித்திருக்கும் கையுங்காலுஞ்சுரிமுடக்கும்
மானேவயிறுபுடைத்திருக்கும் மலமுந்தியும்வாயுலரும், (௧௨௭)

உலருந்தண்ணீர்தாகிக்கும் உந்திமலருங்குரல்வேறும்
மலர்ந்ததாமரைப்போல்முகமும் வாடியொடுங்கிச்செவிதாழும்
முலையின்பாலும்உண்ணாது மூச்சுவாங்கும்இதுதீர
பலருஞ்சொன்னார்என்னாமல் பழிச்சேதன்றுக்கேட்டிடுமே, (௧௨௮)

காலுங்கையுமிகவற்றிக் கட்டிப்போட்டால்போல்பிள்ளை
வேலும்வற்றிவெளுப்பிட்டு வேறேகுணமாய்க்குரல்நெறித்து
சாலமுலைப்பால்குடித்தாலுஞ் சற்றுந்தேறுதிருப்பதெனில்
நீலவட்டமுலைமாதே நிசமாய் தேரைத்தோஷமிதே, (௧௨௯)

தேரைதோஷத்துக்குமருந்து - ஆசிரியவிருத்தம்,

புள்ளடிச்சிறுகிரைநீராரை தன்னுடன் புகழ்காணி நீர்முள்ளியும், பொய்யாமல்இவ்வகை சமூலமுடனேகளா புனமல்லிக் குமிள்நீலியும் மொள்ளவருகரிசலாங்கண்ணியுடனே முடக்கொத்தானு வேர்சமனதாய் - மூன்நாழிநீர்தனைநாலிலொன்றாகவேமுதல்பாகமாயிறக்கி மெள்ளஅதிமதூரமும் திப்பியிலுடேலம்மிளகுவகைக்கால்பலமதாய் மென்பசும்பால்விட்டரைத்துக்கலந்துமேயிருநாழி நெய்யினுடனே - உள்ளபடிநன்ருய்எரித்ததைவடித்துபின் உரைத்திடு நரண்டியளவாய் - உண்டிடக்குளிதோஷந்தேரையின்தோஷமுடன் ஓடியேபோய்விடுமே. (௱௯௰)

சகலதோஷநிவர்த்தி - தன்வந்திரி

எண்சீராசிரியவிருத்தம்,

நிலையானதோஷசர்வாங்கமெல்லாம் நிலைப்போதில்நீறுநர்கு மூலஞ்சொல்வேன், வமையான - வ - ன ம - ப - என்றுதானே வங் - சிங் என்றுசிவ - சி - வ - ய - ந - மஎன்ன, துமையானதோஷநிவர்த்திதானுச்சுசொல்லவும்போகுமோசூட்சாசூட்சம் - கமையானதோஷநிவர்த்திதன்னு லேகவலைநீக்கிக்காட்சிப் பெறுவாய்தானே. (௱௯௧)

சகலதோஷத்துக்கும்குளிசம்.

கீழ்க்காயிநெல்லிவேர்முடக்கொத்தான்வேர் கிருபையுள்ளநாயுருவிகஞ்சாங்கோரை, தாழ்க்காயின்விடத்தலைவேர்நிலக்கடம்பு தழைக்கசிறுபு ளடிபோச்சுரையின்வேரும் கேழ்க்காயின் எட்டுவிதவேருவாங்கிக்குளிசமிட்டுக் குழைந்தைக்குந் தாய்க்குங்கட்ட - ஊழ்க்கானசகல தோஷங்களெல்லாம் ஓடிகடலிற்புக்கும் உண்மைதானே. (௱௯௨)

தோஷங்களுக்கெல்லாம் மாத்திரை

எண்சீராசிரியவிருத்தம்.

அதிமதூரம் மாமஞ்சள் முத்தக்காசு அதிவிடையம் வசம்பு கடுக்காயும்நல்ல, புதிதேவதாரமெல்லாஞ் சமனுய்சேர்த்துப் போடுதலைச்சாற் விட்டரைத்துக் குன்றிப்போல கதிபெறவேயுண்டைசெய்து முலைப்பால்தேனில் கருணையுடனேகொடுக்க மதலைகட்கு. சதியான தோஷமெல்லாம்பறந்துஓடிசமுத்திரத்திற்புக்குமெநச்சாற்றினுமே

சகலதோஷத்துக்கும் துவாலகைகா விற்கட்டமருந்து

அறுசீராசிரியவிருத்தம்.

வகுக்குந்துவாலைதனைக்கேளு மானேசின்னிவிளாநொச்சில்
பகுக்குஞ்சீந்தில்தான்வேம்பு பையநறுக்கிவசம்புள்ளி
தொகுக்கத்துவளைத்தனையிடித்துத் துவாலைகண்டக்கால்தன்னில்
மிகுக்கமுடிந்துக்கட்டிடவே விரைந்துதோஷம்போய்விடுமே. (௱௯௩)

## தீராதோஷகுணம் அறுசீராசிரியவிருத்தம்.

செய்யகண்ணுமிகச்சொருகு சீதந்தண்ணீராய்கழியும்
மையமேனிக்கருப்பாகும் மாங்காரிப்போலஆசனமாம்
வையதேகம்மிகஇளைக்கும் பாணம்போலவயிறுகும்
செய்யதோஷமிதுதானே தீராதென்று நானுரையே. (கஎரு)

சேயினுடம்புமிகநாறுஞ் செல்லாமுலைப்பால்அருந்தும்
காயுமுடம்புகண்குழியும்கண்டால்இதுதான்அறியாயோ
தேயுமுடையாய்சிவனுணர் தீராத்தோஷமென்றேதான்
ஆயாவேதத்தளவுகண்ட அகத்தியனார் அருளினமே, (கஎசு)

## தோஷவகுப்பு முற்றிற்று.

அகத்தியர்திருவடிகளே சரணம்.



## மாந்தவகுப்பு.

### மாந்தம்வருமாறுகூறுகின்றார்.

அன்னமுப்பாலுநெய்யும் அழுகியபழமுந்தேய்கால்
பின்னையுங்கடலைவெல்லம் பெரியதோர்க்கதலிப்பண்டும்
தின்றுமோர்க்காலந்தன்னில் தீயெனவெதுப்புமாகில்
ஒண்ணில்லாபிள்ளைக்குத்தான் உகந்துமேமாந்தமுண்டாம் (கஎஎ)

அன்னப்பால்மலக்கட்டாகி அதன்வுடல்கனத்துந்தோன்றி
தின்னத்தால்வாயுபண்டந் தின்றதனுலேமாந்தம்
பின்னைத்தான்மயிர்க்குச்சிட்டுப் பிள்ளைக்குவெதுப்புக்காணும்
மின்னொத்தஇடையாய்கேளாய் மிகுந்திடுங்கழிச்சல்தானே. (கஎஅ)

மாதாவயிற்றின்மாந்தமுலைப்பாலே மருந்திவருமாந்தம்
சூதாஅரம்பைத்தெங்கிளநீர்சாபி மாங்கிஷங்கனிகவிச்சு
பேதாமலைத்துவரைக்கடலைப் பேசுமொச்சைப்புளியங்கொட்டை
மாதாகொள்ளில்பிள்ளைக்கு வருங்காண்மாந்தந்தப்பாதே. (கஎகூ)

### தன்வந்திரி.

எந்தநோயும்வருவிதந்தான் இனித்தவெல்லமுந்தேங்காய்
சொந்தஉண்டைஉளுந்தையுடன் துவரைவாளைவாழைகண்டை
சந்தமேதிப்பால்இறைச்சி சருகுத்தண்ணீர்புளிமோர்தான்
வந்துபாகல்சுரைக்கதலி வருநுமாந்தமிவைதின்றால். (கஅ0)

### மாந்தத்தொகை (உக) கூறுகின்றார்.

என்னுமாந்தவகைகேளு இபலும்வாதமாந்தமுடன்
உன்னியபித்தமாந்தம் உயர்செறிசேஷ்மமாந்தம்

பன்னியவிஷமாமாந்தம் பாடுதுபோரின்மாந்தம்
துன்னியவாலமாந்தம் சாமாந்தம்இன்னவ்வேளை. (கசஅ)

எண்சீராசிரியவிருத்தம்.

கேளேசீர்மாந்தமுடன்செரியாமாந்தம் கேடுபுரி கட்டுமாந்தத்தினோடு - பாளானபால்மாந்தம் தலையாமாந்தம் பகரியஎரிமாந்தந்தலையின்மாந்தம் தாளானகணமாந்தம் வெப்புமாந்தம் சதியானகழிமாந்தம் முந்துமாந்தம், வேளானஜன்னிமாந்தம் ஊதுமாந்தம் வீக்கமுதமாந்தமுடன் இருபத்தொன்றே. (கசஉ)

வாதமாந்தகுணம் அறுசீராசிரியவிருத்தம்,

ஒன்றும்வாதமாந்தகுணம் உரைக்கக்கேளுந் திருந்தவே
பொன்றுகால்கைகுளிர்ந்துதாம் பொருமும்விழி பால்பார்த்தமுக்கும்
குன்றுமெய்யில்வேர்வையுமாம் குழிபவலிக்கும்பலவிதமாய்
துன்றுதுடிக்கும்கோட்டாவி துளையுநாசிப்புண்ணாமே (கசங)

பித்தமாந்தகுணம்.

ஆமே பித்தமாந்தகுணம் அடுத்தேதவாந்திபேதியுமாய்
தாமேமூர்ச்சையாய்க்கானுந் தயங்கிக்கம்பலாகிவிடும்
போமேமேனிமஞ்சனித்துப் புசியும்வேர்வையாய்க்கடுக்கும்
வாமேகுழிவிதேகமெங்கும் வலிக்குங்குளிருமயக்கிடுமே. (கசச)

(சேஷ்மமாந்தகுணம்,)

மயக்கிடும்சேஷ்மமாந்தம் வகையினைவகையாய்க்கேளு
முயக்கிடுகளிறுண்டாகும் முழுதுடல்சிறுசிவிர்ப்பாம்
பயக்குநாவுமொருக்கும் பயந்தேஅயாலே பான்கொடுக்கும்
சயக்கவயிறுகழிந்துவருந் தளராபொருமும்வயிறதுவே. (கசரு)

(மாந்தகுணம்-கூறுகின்றார்)

பிள்ளையுங்கணந்திருக்கும் பிரண்டைபோல்காணும்பின்னரி
உள்ளமுங்கண்சிவந்து உடம்பினில்நோயுங்காட்டும்
துள்ளிநீயகையில்தங்கா துடித்திகைக்கழலுமாகில்
கள்ளமாய்க்காணுந்தாழ்நதும் கண்குழிந்திருக்குமாந்தம், (கசசு)

மாந்தத்தின்குணமேகேளாய் வயிறுநோம்வெப்புநாறும்
சேர்ந்துகைகால்குளிர்ந்துதோகைபேமுலையுண்ணாது
வாந்தியுநிலவேபண்ணும் வயுநோயுவேர்த்துக்காயும்
வாந்தியேமயக்கமுண்டா மாந்தத்தின்குணமதாமே. (கஎஎ)

மாந்தத்தின்குணமேதென்றால் வயிறுழியுமயக்கமதாய்
காந்துபசியுமில்லாமல் காமவிசாரங்கொண்டவர்போல்
சோர்ந்துகிடக்குங்கைகாலுங் குளிர்ந்தேகாணுத்தொல்லுலகில்
காந்தள்மலர்போல்கையுடையாய்க் கனத்தமாந்தகுணமிதுவே, ()

தன்வந்திரி.

பாரோசீதமலமுடனே பதமாய்க்கழியும்பலவிதமாய்
தேரோகெட்டப்பாலதுபோல் தெளிந்தகண்ணீர்ப்போலவுமே
வாரோகழியுங்குணம்பாரு வலமாய்உள்ளங்கைகாலும்
நேரோகுளிர்ந்ததண்ணீர்போல் நிகழ்ந்தவென்றுந்தான்பாரே. (கசசு)

பாரோவெதும்புங்கண்சுழலும் பனிபோல்தேகமிகவேர்க்கும்
பாரோமுகமும்பலவிதமாய்ப் பளிங்குபோலேஒளிமினுக்கும்
பாரோயிந்தகூறத்தனைப் பருவம்அறிந்துகொண்டெல்லாம்
பாரோயிந்தக்குறிதானே பண்பாய்மாதமென்றுரையே. (கருய)

மாந்தத்துக்கு பச்சிலைச்சாறு - வெண்பா.

நொச்சிப்பொடுதலையும்நுணா * வேலியிநான்கும்
பச்சைஇலைசரியாய்ப் பாலருக்கு - அச்சமற
நீர்வாவேதான்நறுக்கி நீகொடுக்கவேமாந்தம்
ஊர்விட்டுப்போமென் றுரை. (கருக)

மாந்தத்துக்கு வேறு பச்சிலைச்சாறு.

அறுசீராசிரியவிருத்தம்.

உத்தாமணியும்பேய்மிரட்டி உகந்தசாணைக்கிலையுடனே
வித்தாரமுள்ளவெதுப்படக்கி வேலிநொச்சில்இவை ஆறும்
ஒத்தேவதக்கிச்சாறுகொண்டு உயர்ந்தசம்புசிறுதேக்கு
சற்றேஆமைஓடுச்சுட்டுச் சாற்றிற்கொடுமாந்தம்போமே, (கருஉ)

[மாந்தத்துக்கு வேறுசூரசம் நிலைமண்டில வாசிரியப்பா]

ஒருபிடிபொடுதலை ஓர்கல்லுப்புடன்
இருவிதம்ஒன்றதாய் இடித்துச்சாறுசெய்
சிறுவிதசட்டியிற் சிறுகசெய்தபின்
தருவிதம்உண்டிடத் தணியுமாந்தமே. (கருங)

மாந்தத்துக்கு வேறுகுழம்பு அறுசீராசிரியவிருத்தம்.

வெற்றிலைக்காம்புபதினொன்றுமேவுவசம்புஅவ்வளவு
பற்றியஉள்ளிந்தான் இரண்டுப்பண்பாந்திப்பிலிதான் ஒன்று
சுற்றிவெதுப்பித்தான் அரைத்துச் சுகமாய்ப்பருவக்கக்கபடி
வற்றியவெந்நீர்தனிலிடவே மாந்தம்போமென்றருளினரே. (கருச)

மாந்தத்துக்கு வேறுகுடிநீர்,

விடுமேஓமம்உள்ளியுடன் மீறுமிளகுதிப்பிலியும்
நடுமேசீலைதனில்முடிந்து நன்றாய்காழிநீர்தன்னில்
இடுமேஅடுப்பில்எட்டொன்றாய் இதமாய்க்காச்சிக்குடிநீரை
கொடுமேமாந்தம்உள்ளவெலாங் குடிபோமென்றுக்கூறினரே (கருரு)

மாந்தத்துக்கு வேறுமருந்து,

வல்லைக்குரோட்டைஇலையதனை வாட்டிப்பிழிந்துதானதிலே
கல்வியோடுநல்வசம்புக் கனத்தவட்டத்திப்பியுடன்
சொல்லிச்சுட்டுஆட்டியதை சுருக்கில்கலக்கிவார்த்திடவே
மல்லும்பொல்லாவினையான மாந்தம்போமென்றருளினரே. (௧௫௬)

மாந்தத்துக்கு வேறுதுவளையும் உள்ளுக்குமருந்து,

வேலிப்பருத்திமேனியுடன் வேளையிண்டுப்பொடுதலையும்
ஆவித்தின்னும்அந்தியிலை ஆறுவதக்கிச்சாறுகொடு
கோலவசம்புஆமையொடுக் குலவும்ஓமம்சுட்டரைத்துக்
காலிற்கையில்துவளையிட்டுக் கடுகக்கொடுமாந்தம்போமே, (௧௫௭)

மாந்தத்திற்கு வேறுதுவளை தேரையர் கலிவிருத்தம்,

ஆவும்சின்னி அடவிவெண்டுணர்சிலை
ஏவுவேப்பிலைச் சிந்திலிபிடித்துநீர்
மேவுமூன்றுநாள் மேல்த்துவளையிட
நோவுமாந்தம் நொடிக்குள்ளேநீங்குமே, (௧௫௮)

மாந்தத்துக்கு வேறுகியாழம் வெண்பா.

வேளைவேர்சுக்குடனே வெந்தயமும்வெள்உள்ளிப்
பாளைசேர்ஓமம் பெருவசம்பு—வாள்விழியாய்
ஒன்றாகக்காய்ச்சி உடன்குழவிக்கிடக்
கண்டாலும்மாந்தம்போம் காண், (௧௫௯)

மாந்தத்துக்கு வேறுகியாழம் எண்சீர் ஆசிரியவிருத்தம்.

என்றேமஞ்சணத்திநொச்சியில் இனியவேலிக்கழல்கொடியும்
ஒன்றாய்ஒவ்வொன்றொருபிடியாய் ஒக்கவறுத்துச்சுட்டிதனில்
நன்றாய்க்கருக்கிநீர்நாழி நபத்துவிட்டுஅடுப்பேற்றி
கன்றாய்ஓமம்வசம்புசுக்கு மிளகுப்பொடுதலைக்காயமே. (௧௬௰)

ஆமேதிப்பிலிஅதனோடு அருகல்லெண்ணையில்சிவக்கத்
தாமேவறுத்துப்பொட்டணமாய்ச் சமைந்தநீரினுடன்போட்டு
வேமேகாய்ச்சிபோர்சங்கு விளைவில்கொடுப்பீர்ஆமாகில்
போமேமாந்தமுள்ளவெல்லாம் போயிக்கடலிற்புக்கிடுமே. (௧௬௧)

மாந்தத்துக்கு வேறுகியாழம்,

உத்தாமணிபீலிவேளையின்வேர் உகந்தநொச்சிப்பொடுதலையும்
சித்தமுருங்கைநுணாயிர்க்குச் சோவறுத்துநீர்விட்டு
ஒக்தாய்ஓமம் * திரிகடுகு உபர்ந்தவசம்புமுடிந்ததனை
வைத்தெட்டொன்றாய்க்காய்ச்சிவா மாந்தம்எல்லாம்ஓடிடுமே (௧௬௨)

மாந்தத்துக்கு வேறுகியாழம்,

சுக்குமிளகுதிப்பிலியும் தூய்யஓமம்உள்ளியுடன்
ஒக்கநறுக்கிச்சிலையினில் உகந்துமுடிந்துநீர்உழக்காய்

செக்கச்சிவக்கக்காய்ச்சியபின் சேராய்ச்சங்குபுகட்டிடவே
மிக்கமாந்தமெனிதோஷம் விட்டேயோடுங்கண்டாயே. (௧௬௩)

மாந்தத்துக்குவேறுகியாழம் தன்வந்திரி,

எண்சீராசிரியவிருத்தம்,

கியாழத்தால் மாந்தங்கள் போகக்கேளு கெடியான மாசிபத்திரி பற்பாடந்தான், கியாழத்தால்நாயுருவிமுட்காவேளை கருஞ்சீரகத்துடனே கோழி யெச்சம். இயாழத்தால் பற்பமாயச்செய்துக்கொண்டு இருவேளை விசங்குச்சுக்கோடேவலம், கியாழத்தால் சோகவளியும் பறங்கிச்சக்கை சீக்கனும்பட்டைக்காலட்டம்புல்லே. (௧௬௪)

புல்லானகடுக்காயும் மாசிக்காயும் புகழான வசம்போடு தான்றிமுத்தம், வில்லானசீர்ப்படியிரண்டதாகும் விதமாக வட்டொன்றுய்க்காய்ச்சியேதான், கல்லானமாந்தமொடு சுழிமாந்தங்கள் கைப்பிளிப்பால் வந்தமொருகழிச்சல்மாந்தம், மல்லானமாதாவாய்ச் சிசுபண்டத்தால் மருவிவந்தமாந்தமெல்லாமயங்கிப்போமே. (௧௬௫)

மாந்தத்துக்குவேறு குளிகை அறுசீராசிரியவிருத்தம்,

என்றேஓமம்திப்பிலிசுக்கிரு சீரகமுங்கொத்தமலி
பன்றுமையோடுசூதசனி பகாதிருந்துஓர்நிறையாய்
குன்றுநீரில்தானரைத்து அதித்தகல்லேற்றவரைமென
உண்டாமாந்தம்உள்ளஎலாம் ஓடுங்கண்டாய்உண்மையிதே, (௧௬௬)

மாந்தத்துக்கு வேறு குளிகை,

மாசிலார்க்குமாந்தஉண்டை வண்மையுடனேதான் அறைக்க
ஆசையாகவாய்விளங்கம் ஆமைஓடுதென்பிளகு
வாசமானபொடுதலைக்காய் வசம்புதிப்பிலிகழல்பருப்பு
கூசாமல்சரிநிறையாகக் கூட்டிநீவைத்தரைத்திடுமே, (௧௬௭)

அரைத்துமருந்துபொடுதலைச்சா றம்பிதனிலேவிட்டரைத்து
நிரைத்தகுன்றைக் காயளவு நிழலில்உலர்த்திக்குளிகைதனை
காத்தின்கழிச்சல்இருமலுக்கு சொற்சிறுவழுதலைக்கியாழத்தில்
உரைத்துஉண்டைதனைகொடுக்க உடம்பிற்பிணியுந்தீர்ந்திடுமே, ()

இதுவுமது அதற்கு அனுபானம்,

வாந்திபொருமலுக்கெல்லாம் வளரும்வேலிக்கியாழத்தில்
ஓய்ந்தவெகுவாய்க்கழிச்சலுக்கு ஓமக்கியாழந்தன்னிலிட
சேந்தியானமாந்தத்துக்குங் கியாழமறிந்தேவிடுவீரே
மாந்தம்விட்டுத்தானுலும் வளரும்பிள்ளையாமென்றே, (௧௬௯)

மாந்தத்துக்கு வேறுகுளிகை.

திரிகடுகோமம்உள்ளிச் சீர்பெருங்காயமற்றக்
கரியசீரகம்வகைக்குக் கணக்கதுவிருகன்றாலு
அரியதோர்வசம்புமூன்று அறிதகிப்பதினொந்தாகும்
புரியசாரணைவேர்ஐந்தும் பொடுதலைக்கொழுந்துமாவே, (௬௭0)

கடுக்காய்களில் எழுவகைப்படும் அவையாவன.

விசையன்கடுக்காய் விந்தியதேயத்திலுற்பத்திபோய்ச் சுரைக்காய் போன்றிருக்கும் இதற்குவாதந்தீரும் உரோகணிகடுக்காய் கன்னியாகுமரியிலுற்பத்தி நாலுவகிருயிருக்கும் இதற்குசன்னிதீரும் பிரிதிவிகடுக்காய் செளராஷ்டிரதேயத்தி லுற்பத்தி மேற்றோல்மெல்லியதாயிருக்கும் இதற்குபயித்தியந்தீரும் அமுர்தகடுக்காய்காசிதேயத்திலுற்பத்தி சதைபோன்றிருக்கும் இதற்கு சேஷமந்தீரும் சிவந்திக்கடுக்காயிலுற்பத்திபொன்னிறமாயிருக்கும்இதற்குமூலந்தீரும் திரிவிரிதைகடுக்காய் மலைகளிலுற்பத்திபஞ்சவன்னமாயிருக்கும் இதற்கு விரணந்தீரும் அமையின்கடுக்காய் பொதிகைமலையிலுற்பத்தி கருப்பாயிருக்கும் இதற்குதுன்பந்தீரும். (௬௭௧)

ஆம்பெருந்தும்பைக்கொழுந்து அவ்வளவுவேலிப்பருத்தி
ஓம்பெறதான்வெதுப்பிஒன்றாகவேஇடித்து
தாம்பெருந்தும்பைச்சாற்றில் தனிபொடுதலையின்சாற்றில்
காம்படஅரைத்துச்சுண்டைக்காயளவுருண்டைசெய்யே (௬௭௨)

செய்தோர்குளிகைதன்னைத் திகழ்நிழல்உலர்த்திக்கொண்டு
வையகபாலர்தங்கள் வளர்பருவத்தைப்பார்த்து
கொய்யகால்அரைமுக்கால்முழுக் குளிகைவெந்நீரிலீய
மைமாந்தக்கட்டுமாந்தக்கழிச்சலும் வலிப்புபோமே, (௬௭௩)

மாந்தத்துக்குவேறுகுளிகைதேறையர்கலிவிருத்தம்,

போகுஞ்சண்பகப்பூ இலாமிச்சம்வேர்
ஏகுங்கோஷ்டமோ டேலங்கோரோசினை
வேகுஞ்சாதிர பேதிமதூமமும்
வாகும்வெட்டிவேர் மாசிப்பச்சொன்பதே, (௬௭௪)

ஒன்பதுவகைக் கொன்றுக்கழஞ்சிடை
பன்பனுவெட்டி வேர்த்தண்டிச்சாற்றினில்
என்பதாஎழு நாழிகையாட்டிநீ
பின்பதுகுன்றிப் போலத்திரட்டியே, (௬௭௫)

திரட்டிடுஉலர்த்தி யொருமாத்திரை
விரட்டிடுமுலைப்பாலின வெந்நீரில்
குரட்டிடும்இழத்தே கொடுமூன்றுநாள்
காட்டிடும்பின்கடும்பிணியாவுமே, (௬௭௬)

மாந்தத்துக்குவேறுகுளிகை தன்வந்திரி.

உரைப்பேன்பூரம் பலம்அரைதான் ஒகோலவங்கம் ஏலமுடன் திரைப்பேன்வசம்பு சீசகந்தான்திறமாய்மாசி அதிவிடையம் கரைப்பேன் வகைக்குக் கால்பலமாய் சுனமாய்ப்பூரஞ் சுத்திசெய்து மரைப்பேன்கல்வம் அதிற்போட்டு மாசிப்பத்திரிவேர்ச்சாறே. (கஎஎ)

வேர்ச்சார்சாமம் ஒன்றரைப்பாய் விஷ்ணுக்கரந்தைச் சார்சாமம் வேர்ச்சாற்வார்த்து அரைத்துக்கொண்டு விரமாய்க்கொத்தமல்லிவிதைப்போல் வேர்ச்சாற்குளிகை செய்துக்கொண்டு விளங்குநிழலில் உலர்த்தியபின் வேர்ச்சாற்குளிகை செப்பில்வைத்து வேதப்பொருளாமனதிலெண்ணே, (கஎஅ)

எண்சீர் விருத்தம்,

எண்ணவேகுளிகையொன்றெடுத்துக்கொண்டுஎழிலானமாந்தத்தின்கியாழத்திய, எண்ணவேஓடிவிடு மாந்தமெல்லாம் இயம்பினேன் முன்சொன்னதெல்லாம்போகும், எண்ணவேஇம்மொழிபோல் ஆர்தான்சொல்வார் எடுத்தமுறையாடுமிந்த முன்னூறுபாரு, எண்ணவே முன்சொன்ன மாந்தமெல்லாம்என்சொல்வேன்பறந்தோடும்இதனால் பாரே. (கஎக)

மாந்தத்துக்குவேறுநெய்,

கட்டளைக்கலித்துறை.

சுத்தாவின்னெய்யும் ஒருநாழிஉமம்துதியலந்தான்
உத்தாமணிஇலைவெற்றிலைக் காம்பொவ்வொருபிடியாய்
வித்தானசுக்குடனே வசம்புள்ளிவிருதனைடை
எத்தாய்அரைப்பித் தெரியிடமாந்தங்களேவிடுமே. (கஅ0)

மாந்தத்துக்கு வேறுஎண்ணெய்,

எருக்அகத்திச்சாரணைவேலி எண்ணெய்ஓர்உழக்காய்
வேகமதாகவுங் கூனன்முதுகுள்ளிவெண்வசம்பு
ஆகமதாகவிருகன்னையும் அரைத்ததனைப்
பாகமதாகஎரியிடமாந்தம் பறந்திடுமே. (கஅக)

சொல்லாறுவல்லினமெல்லினமோடிடை தோன்றிலொன்று
நில்லாதுநோநிரையாய் நிரைத்துநிசம்பியநூற்
கல்லாதமாந்தர்கட்டேமாங்கனியென்பர்கற்றுணர்ந்த
நல்லோரவர்களுங் கூவிளங்காயென நாட்டுவரே, (கஅஉ)

மாந்தத்துக்குவேறுஎண்ணெய் தன்வந்திரி

கலிவிருத்தம்.

செய்திடமாந்த எண்ணெயைச்சொல்வேன்
வைதிடஇஞ்சி சங்குடன்பின்னி

கைதிடகாணி காந்தையும்வன்னி
கெய்திடஎல்லாம் நோய்ப்பிழிந்திடே, (௧௮௩)

பிழிந்துசிற்றோண்டத்தின் எண்ணெய்
கலந்திட்டேயொரு கட்டையால்திரிடு
செவந்திடக்காய்ச்சி சிறுகஇறக்கிடு
மெலிந்தநோய்தீர விளம்புவேன்கேளே. (௧௮௪)

கேளிடமாந்தம் மலபந்தமாந்தம்
சேவிடுசலத்திற் செனிசிறுமாந்தம்
பாலகர்உண்ணைப் பறந்திடும்பாரு
சிலக்கொடிய சீதளமபோகுமோ. (௧௮௫)

மாந்தத்துக்குஎண்ணெய் அறுசீராசிரியவிருத்தம்,

விளக்கெண்ணெய்அரைஅழாக்கு வெண்காயம்பெரும்பூண்டைந்து
தனுக்குறுமணித்தக்காளிச் சாறதுஉழக்கதாகும்
களக்கமாய்ச்சாறும்எண்ணெய்க் கலந்துவெண்காயந்தன்னை
அளக்கவேஅரிந்துபோட்டு அடுப்பில்வைத்தெரித்திடாயே. (௧௮௬)

எரித்துபொன்னிறமதானால் இறக்கிவடித்துக்கொண்டு
விரித்திடுங்கடுரோணி விளம்பியவிருகணென்று
தரித்துமேவருந்துதாளாய் தானதிற்போட்டொன்றாக
பிரித்தொருநாண்டிஎண்ணெய்ப் பிள்ளைக்குக்கொடுப்பதாமே. ()

கொடுக்கவேதான்உட்காய்ச்சல் கொடுங்கணைக்காய்ச்சல்மாந்தம்
முடுக்கியதொண்டைவாய்ப்பண் மூலத்தின்சூடுமற்ற
படுக்கவேமிகப்பொல்லாத பலவகைமுச்சலெல்லாம்
அடிக்குடன்ஓடிப்போமென் றறைந்தனர்நூல்வல்லோரே, (௧௮௮)

மாந்தத்துக்குவேறு எண்ணெய்.

கஞ்சாங்கோரைப்பிரமியிலை கனத்ததூளசிபழம்பாசி
செஞ்சாதிலவிளாவல்லாரைச் சிந்தில்தண்டுமூலமுடன்
மிஞ்சாவசம்புரோகணியும் வெண்காவெளியோர்விருகணைடை
அஞ்சாஎண்ணெய்ஓர்அழாக்கு அதிலிட்டெரித்துபதம்பாரே, ()

பாரேயிறக்கிவடிகொண்டுப் பரிவாந்துட்டெடைஒன்றாக
கூரேபாலர்உள்ளுக்குக் கொடுக்கமாந்தம்போமிப்பால்
காமேய்ச்சாபத்தியமாய்க் காதலனைப்பெற்றத்தாயை
நேரேவைக்கநலமாகும்நீலவிழிமாமடமயிலே, (௧௯௰)

தோஷமாந்தத்துக்குதைலம் தேறையர்
கலிவிருத்தம்,

அன்னமேமுருங்கப்பட்டைஅத்துடன்
மின்னமேவண்கருவும் வெள்ளுள்ளியும்

இன்னம்வேப்பெண்ணெயிவைவநாலுடன்
சன்னமேசெய் தைலம்இறக்கிடே, (கசுக)

இறக்கிடுந்தைலமதிற்குத்தியே
உறக்கிடுங்கண்ணில் இட்டிறநாவினில்
துறக்கிடுந்தடவத்தோஷ மாந்தமும்
பிறக்கிடுமிது மெய்ம்முறைகண்டிடே. (கசுஉ)

மாந்ததோஷத்துக்கு சாறுவெண்பா,

ஈரவெண்காயமுடன் சதிப்முடக்கொற்றான் இலையும்
போரய்வெதுப்பிப் பிழிந்திட்டுச்-சோவே
மூன்றுகாசெடை புகட்டமூணமாந்ததோஷம்
ஊன்றுதாவில்லாமல் பறந்தோடும், (கசுஙு)

மாந்ததோஷம் வலிப்பு மலக்கட்டுக்கு பச்சிலைச்சாறு

எண்சீராசிரிய விருத்தம்.

நல்வேளை இலைவசம்பு வள்ளித்தமாலம் நையவேநருக்கிவெதுப் பிப்பிழிந்து சல்லியமாங் குழந்தைகட்குப்பருவம்பார்த்து தந்நக்கால் அரைமுக்கால் முழுச்சங்காக, புல்லவே புகட்டிடவேமாந்ததோஷம் பொல்லாதவலியுமலக்கட்டுந்தீரும், அல்லளகப்பவளஇதழ்பெண்ணே யிந்தை அன்புடனேசெய்தருமம் ஆக்கமாமே. (கசுச)

மாந்ததோஷவலிப்புக்கு உச்சியிலப்புநற்குங்

கால்கையிற் கட்டமருந்து

அறுசீராசிரியவிருத்தம்,

சிறுபள்ளடியும் வெள்ளுள்ளித் தின்னுமநற்கிழக்காய்நெல்லி
உறவாய்அரைத்துப் பிள்ளைதன தூச்சில்கப்பியிஞ்சினகை
நெறியிரண்டு மூன்றுக்குளிகை நேராய்உருட்டிநெடுஞ்சீலை
மறைவாய்அதனிலேமுடிந்து மாறுகைகாலிற்கட்டே, (கசுரு)

மாந்தம்பாலகிரியைக்கு கியாழம்.

வேலிப்பரித்தி யொருபிடியும் விரும்புஞ்சுக்கு சடாமாஞ்சில்
கோலவிளாவும் வசம்புள்ளிக் குறித்தபிளகுகூடவுடன்
சீலஓமஞ்சீரகமுஞ்சிவக்கக்காய்ச்சு யெட்டொன்றாய்
பாலர்க்கொருசங்கிடுவீரேல் பாலக்கிரியைப்போய்விடுமே, (கசுசா)

மாந்தம்வயிற்றுப்பல்லுக்கு மருந்து,

அசமதாகமும்வசம்பு ஆனசட்டிக்காயவைத்து
வசமாய்வறுத்துப்பொடிசெய்து மணியின்சாற்றிலிவையிரண்டும்
நிசமாய்க்குழப்பிக்கொதியிட்டு நீயோர்சங்குகொடுத்தாற்கால்
அசையாமாந்தம்வயிற்றுப்பல் அகலும்பின்னர்அணுகாதே. (கசுஎ)

மாந்தஉப்பிசத்துக்கு கியாழம்,

ஒப்பம்ஓமம்காசெடைவை உகந்துசட்டியினில்வருத்து
குப்பைமேனிவேர்பட்டைக் கூறும்இரண்டுபலந்தானே
அப்புஓர் அரைப்படிவிட்டு அளவைவற்றவேகாய்ச்சி
வைப்பாய்க்கொடுக்கவேஉப்பல மாந்தம்போகுங்கண்டாயே. (௧௯௮)

மாந்தம்வயிற்றுவலி செரியாமாந்தம் வயிறூதலுக்கு

மருந்து,

வேலிப்பரித்திச்சாறுழக்கில் மிறுவசம்புந்திரிகடுகு
மாவிக்கோரோசினைஇந்துப்பு வகைக்குவிருகனிடையிரண்டு
வேலிக்கொழுந்துமேநான்கு விருகன்அரைத்துட்கொளமாந்தம்
வாலர்வயிற்றுவலிசெரியா மாந்தம்வயிறூதற்போமே, (௧௯௯)

மாந்தபொருமலுக்கு எண்ணெய்

எண்சீராசிரியவிருத்தம்,

பேய்மிரட்டிவெதுப்படக்கிப் பொடுதலைத்தான் பிரமியிலைவேலியொடுதுளசிதுத்தி, சாய்கின்றஅகத்தியிலைச்சமன்இடித்துச் சாறுபடிகால்பச்சைமஞ்சட்சாறு, வேய்கின்றவீசமதுகூட்டம்கூட்டி விளக்கெண்ணெய்ப்படிஅரையுமாகவேதான் ஆய்கின்ற ஓமங்கால்பலமதாகும் ஆமையோடுச்சுட்டுப்பலமுங்காலே, (௨௱)

காலானஉள்ளிபலங்காலதாகும் கனவசம்புபலங்காலாம் இடித்துக்கொண்டு மாலானஎண்ணெயினிற் கலந்துக்காய்ச்சி வடித்துஒருதுட்டெடையாம் எண்ணெய்தானும், வேலானவெண்காயம்பணவெடைதான்ஒன்று விபரமாய்பொரித்து போட்டிழைத்துபின்னும், பாலானபெருங்காயம் பணஎடையுமரைத்துப் பண்பாகவே கொடுக்கவேதிகேளே (௨௱௧)

கேளேநீமுதல்நாளிற்கழிச்சல்மெத்தக் கிளரிவருமற்றுநாளதுதுவக்கி, தாளேநீபொருமலுடன் சத்திமாந்தம் தணியாதஉறக்கமதாகிருந்தீரும், நாளேநீவியாதியதுதிரமட்டும் நலமானஎண்ணெயது கொடுக்கநன்று, நீளேநீபத்தியந்தான் பிசகவேண்டாம் நீலவிழிமாமயிலேநிதானிப்பாயே. (௨௱௨)

மாந்தத்துக்கு எண்ணெய்

அறுசீராசிரியவிருத்தம்,

நன்றேசங்குஆமணக்கு நாவல்நன்னாரிக்கருந்துளசி
கொன்றேசின்னிபற்பாடம் குப்பைமேனிக்கொளுத்தும்பை
வென்றேயிவைகள்வகைவகைக்கு வேர்பிடிவெட்டிசவி இருநாள்
ஒன்றேஉலர்த்திதான்இடித்து ஒருதூணிநீரில்ஊட்டிடுமே. (௨௱௩)

ஊட்டிடுமெணிந்தக்காளியுடன் ஓரிலைதாமரை அவுரிபுங்கு
நாட்டிடுஇவ்விதம் வகைவகைக்குநாழிச்சாற்றில்பிழிந்நாட்டி
வாட்டிடு சங்கிமதாருடன் மாஞ்சில்சண்பகப்பூவுடனே
காட்டிடுலைவங்கம்செவ்வியமும் கடுக்காயுடன்வால்மிளகதுவே. (௨௱௪)

அதுவேபண்டுபொங்கிபுடன் அடவாய்வீதம்வகைவகைக்கு
வதுவேயிரண்டுவிராகனெடை வாங்குகடைசாக்நமையெல்லாம்
பதுவேஇளம்வறுப்பாய்வறுத்துப் பாக்குடன்இடித்துத்தூளாவை
அதுவேசீரிவுடன்தாக்கி அறிவாய்ப்பின்னுமருந்ததுவே. (௨௱௫)

மருந்தேவிங்கம்மஞ்ஜோசிலையும் வாளம்பூரம்கெந்தியுடன்
பொருந்தேபுழுகுகஸ்தூரிப் புகழாய்விராகன்எடையிரண்டு
அருந்தேவீதம்வகைவகைக்கு அடவாயெடுத்துத்தூள்செய்து
வருந்தேகோரோசினையதுவும் வளமாய்விராகன் எடைபோட, ௨௱௬

எடையாதேசிற்றுமணக்கு எண்ணெய் அதிலொருபடியிட்டு
நிடையாய்அடுப்பிலிதையேற்றி தீஇநராமம்எரித்துப்பின்
நடையாய்ச்சுண்டிடும்சீரெல்லாம் நலமாய்ச்செழுமைநிறங்காணும்
படையேதூத்தும்கோய்போகும் பண்பாயிறக்கிப்பார்த்திடவே. ()

இறக்கிஅதனைவடிக்கட்டி எடுத்துஇறுத்திடுசகலமதில்
வறக்கிவாலைப்பநம்மைவைத்து வஸ்துஇதுவெனப்பணித்திட்டு
நறக்கிஎண்ணெதனை்கொண்டு நலமாய்இரண்டுகழஞ்சுஎடை
உறக்கிபிள்ளைதனக்கேதழு உபாயமாய்உள்ளுக்குக்கொடுமே. (௨௱அ)

இதுவுமது வேறுசந்தம்.

கொடுத்துமேஇரண்டுநாழிச் சென்றபின்மூலைப்பாலீந்து
எடுத்தநாள்தவறுஇந்த எண்ணெயைக்கொடுத்தபின்னர்
அடுத்ததோர்குழந்தைதமாதா அவருக்குப்பத்தியங்கேள்
விடுத்ததோர்வறுத்தஉப்பு வெந்நீராம்மிளகுசாற்றே (௨௱௯)

வெந்நீரும்அன்னம்உண்டால் வினையதுவகண்டுபோகும்
கன்னியேபதனமாக காமனைநினைக்கலாகா
நன்னிமையாகஏழு நாளதுகடந்துநாளுல்
பின்னுமேவருநாதண்மைப் பிள்ளையுஞ்சுபமஸ்நம்தந்தே (௨௱௰)

சுபஸ்தமாம்எழுஞ்சென்று பின்புநீஎழுந்தன்னி
நிபஸ்தமாய்தாயும்பிள்ளை இருவர்க்கும்தலைநீர்வாரு
தபஸ்தமாய்ஓமந்தேய்த்து சலமதுவெந்நீர்ப்பட்டால்
சபஸ்தமாய்வினைவிட்டோடும் சடமதுவளுக்குந்தானே (௨௧௧)

வளுக்கவேஇந்தஎண்ணெய் மாத்தந்தாக்கெல்லாம்ஆகும்
குளுக்கவேயெண்ணை நன்னைக் கொடுத்துபின்பேதிஆகும்

உழுக்கவே அதிகபேதி சோபமும் மூர்ச்சையானல்
தெலுக்கெனசுக்கைசீவி செகணமதிற்கியாழம்வையே (௨௧௨)

வைத்துமேகியாழம் ஆக்கி வதுவினிற்கழஞ்சுமூன்று
உத்துமேகொடுத்தபின்பு உபாயமாய்முலைப்பாலூட்ட
சித்ததும்வளையுஞ்சோபம் க்ஷணத்தினில்வாங்கிப்போகும்
வற்றினதேகந்தானும் வச்சிரம்போலேயாமே. (௨௧௩)

மாந்தம் கருங்கிரந்தி அட்சாம்கணங்கள்மேகவெட்டைக்கு

எண்ணெய் ஆறுசீராசிரியவிருத்தம்,

மணித்தக்காளியிலைத்துளசி வளருந்துத்திப்பிரமியிலை
கணித்தவில்வம்வல்லாரைக் கையாந்தகரைப் பொடுதலையும்
தணித்தநுணாபுங்கிலைச்சங்குச் சமனிவையிடித்தச்சாறுபடி
துணித்தஒன்றுதான்றிக்காய்ச் சுக்குங்கடுக்காய்த்திப்பிலியே (௨௧௪)

திப்பிலிபொத்தோடத்தை திகழும்ஓமம்வசம்புடனே
மப்பிலியானகஸ்தூரி மஞ்சள்வகைக்குப்பலமரையாய்
இப்பிலிசாதிக்காயொன்று இவைகளிடித்துச்சாற்றிவிடு
எப்பவிளக்கெண்ணெப்படியொன் றிட்டெரித்துப்பதமெழுகே (௨௧௫)

மெழுகுப்பதமதிலெண்ணெய் வடிவிடுமொருகாண்டிதனயர்க்கு
அழகுபெரியோர்க்கிருகாண்டி. இத்துவழநாளிடவே
கழகுமாந்தம்அட்சமும் கணங்கள்கரிபகிரந்தியொடு
விழுதுக்கொடியப்படர்மேக வெட்டைத்தீரும்பைங்கொடியே, ௨௧௬

ஊதுமாந்தகுணம்,

உடலெல்லாம்ஊதிக்காணும் உவாந்தியுங்கழிச்சலுண்டாம்
குடலெல்லாம்இரைச்சலாகிக் கூப்பிடுஞ்சமுத்திரம்போல்
தொடையெலாம்வலிக்குமிக்கச் சாமுடன்கடுப்புமாகும்
அடவினல்ஊதுமாந்தம் அதுசெயுங்குணங்கள்தானே. (௨௧௭)

ஊதுமாந்தத்துக்கு குளிகை,

கலிவிருத்தம்,

ஓதுங்காரம் அரைரண்டுரோகணி
நீதியாய்க்கருஞ் சீரகம்சீண்டமுலை
மாதுபாலினில் மாத்திரைசெய்திட
ஊதுமாந்தம்விட் டோடுவதுண்மையே, (௨௧௮)

மாந்தம் ஐந்துக்கும் கியாழம்,

அறுசீராசிரியவிருத்தம்,

பொடுதலைவேம்புமாவும் புளிநுணாகொச்சில்வேலி
சடுதியில்ஈர்க்கிவ்வேழும் சமன்கொண்டுக்கியாழம்வைத்து

இடுவகைஓமம்உள்ளிந் திப்பிலிக்கூடக்கூட்டி
அடுதல்சீரகமீதன்னில் அடுப்பினில்எட்டொன்றுக்கே (உ௧௯)

ஆக்கிடுங்கியாழந்தன்னை ஆனதோர்சங்குவார்க்க
போக்கிடும்ஊதுமாந்தம் பேர்மாந்தம்சந்நிமாந்தம்
தேக்கிடும்சொரியாமாந்தம் சிறந்திடுங்கட்டுமாந்தம்
தாக்கிடும்மாந்தம்ஐந்தும் தரணிவிட்டோடுமென்றே. (உஉ0)

மாந்தம் எழுக்கும்மருந்து தேரையர்

கலிவிருத்தம்,

நீங்குமோசினை நேர்உள்ளித்திப்பிலி
ஓங்குமா மதுரம்வசை ஒன்றுக்கு
காங்குநீயோர் கழஞ்செடைத் தூக்கியே
வாங்கும்அண்ட வெள்ளைக்கருவார்த்திடே (உஉ௧)

வார்த்திடுமுலைப்பால் மிதமாகவார்
ஊற்றிடுஅரைத் துள்ளுநக்குமூன்றுநாள்
ஏற்றிடும்வசை மாந்தம்ஓர்வகையும்
ஆற்றிடும்புளி உப்பாகாதென்னுமே, (உஉஉ)

மாந்தமயக்கத்துக்கு மருந்து

அறுசீராசிரியவிருத்தம்,

உத்தாமணியைஅனல்தாக்கி ஒடுக்கிக்கயக்கி சசம்வாங்கி
பெற்றூர்ப்பாலிற்சீரகமும் பேதிகடுகுரோகணியும்
வித்தாரமாகஅரைத்தருந்த வெப்புமாந்தமயக்கம்போம்
நற்றாமரைப்போல்முகநல்வாய்நல்கமாந்தம்நாடாதே (உஉ௩)

பித்தகணபாண்டுக்குக் கியாழம் தன்வந்திரி

எண்சீராசிரியவிருத்தம்.

வாய்க்கவேசிறுதேக்கு வாய்விளங்கம் வால்மிளகு ரோகணியும் சுக்கோடேலம், சாய்க்கவே திப்பிலிஇலவங்கந்தான்றிதக்கோலம்போலத்தூக்காய் வகைவகைக்கு, மாய்க்கவேகால்பலமாய் நிறுத்துக்கொண்டு வண்மையாய்த்தூளிடித்துப் பாண்டத்திட்டு, காய்க்கவேஇருநாழிசலமும்விட்டுக் கடுகவேயெட்டொன்றாய்க்காய்ச்சிறக்கே, (உஉ௪)

இறக்கியேகொடுத்துவிடக் கிரணிமாந்தம் இயல்பான சுரக்கட்டிவிஷதோஷங்கள், உறக்கியே இசிவுகண்டமாந்தத்தோடு உற்றகொருகிராணி சோகைக்காமாலை, நொறுக்கியேகொண்டசுரம் கோழைக்கட்டு நொடிக்கின்ற கொட்டாவிவிம்மல்தும்பல் நறுக்கிவிடும்பித்தகணபாண்டெல்லாம் நமன்ஓடிப்போவான்பார் கியாழத்தாலே. (உஉ௫)

கர்ப்பமாந்தக்குணம் வேறுசந்தம்,

மொழிகிறேன் கர்ப்பமாந்தக் குன்றிதனை முயலக்கேளாய்
பொழிகிறேன்பெண்ணுள்தானும் புதுவாகரிசிக்கொழியல்
விழிகிறேமிதமற்றேதான் விளம்பரம்உண்டதாலே
கழியிளங்கருவுக்கேதான் கனல்தால்சூடுண்டாமே, (௨௨௬)

சூடதால்வாதவாயு தோன்றிடுங்குணத்தைக்கேளு
பாடதால்கருவிற்பற்றிப் பலபலநோய்தான்காணும்
வாடலோடுறுத்திவாயு வன்னியுங்கூடச்சேர்ந்து
தேடவேபிறந்தபிள்ளை தேகத்தில்நோயைப்பாரே (௨௨௭)

தேகத்தின்மேலேநோய்தான் சிலேஷ்மநாடிதானும்
ஆகத்தின்மூலச்சூடு அருகியேமிகுத்துதானால்
போகத்தால்புணர்ச்சிசெய்த பொருட்டதால் சிசுவுக்கேதான்
நாகத்தின்இரைச்சல்போலே நடுக்கிடும்நாடிதானே. (௨௨௮)

நாடியில்வாதநாடி நடக்குமேசர்ப்பம்போல
ஓடியேசாசயொன்று ஒந்தியைப்போலேபார்த்தால்
வாடிடும்பிள்ளைதேகம் வாயெல்லாம்புண்ணாய்ப்போகும்
பேடியின்முலைப்பாற்சுண்டிப் பிள்ளையும்இளைக்குந்தானே, (௨௨௯)

பிள்ளையும்பிறந்திரண்டு ஆண்டதுசென்றுதானால்
கிள்ளையேஅரையிற்கட்டிக் கிலேசமாய்வரட்சிகாணும்
வின்ளவேதேகமெல்லாம் மிகுந்ததோர்கனலினாலே
துள்ளவேபாலன்தானுந் துடித்ததோர்வீக்கமாமே, (௨௩௰)

துடித்திடும்வெளுக்குந்தேகம் தொண்ணூறுநாட்சென்றற்றால்
கடித்ததோர்விஷம்பட்டார்போல் கைகாலும்புண்ணாய்ப்போகும்
வடித்திடுஞ்சுழற்றல்வாய்நீர் வாண்டிடும்அதன்பின்நெஞ்சில்
தடித்திடுங்காறல்தானும் தலையதுநடுங்குந்தானே, (௨௩௧)

நடுக்குமேமூண்றூண்டின்மேல் நாடியும்அசதிகாணும்
படுக்குமேபாயல்மீதே பாலதுகுடித்திட்டாலும்
எடுக்குமேவாந்தியாகும் இரைச்சலும்வயிறுநோயாம்
குடிக்கிறசாறமெல்லாங் குடங்கொண்டுபாயுந்தானே, (௨௩௨)

பாயுமேகறுக்கும்போது பசுமையாய்க்கொடிபோல்வீழும்
வாயுமேதவறிக்கண்கள் மதுவெனச்சிவந்துகாணும்
தேயுமேதேவாங்கைப்போல் செகத்தினர்சொல்லுவார்கள்
நோயுமேபட்சித்தோஷம் இதுவெனஅருளுவாரோ, (௨௩௩)

அருளுவோம்இந்தநோயின் அசாத்தியசாத்தியங்கண்டு
வருளுவோம்கர்ப்பமாந்தம் வல்பிணிவிட்டுநீங்க

வெருளுவோம்புங்கின்னண்ணை விதமதைசொல்லக்கேளாய்
தெருளுவோம்மூன்றுநாழி திருத்தமாய்ப்பருப்பைவாங்கே (உ௱௪)

கர்ப்பமாந்தத்துக்கு புங்கின்னண்ணெய்.

வாங்கிடுபுங்கன்கொட்டை அதனுடன்பருப்பைவாங்கி
தீங்கில்லாவிதாள்மூன்று தினந்தினம்உலர்த்திநாளு
பாங்குடனெடுத்துஇந்த பருப்பையும்உரலில்தாக்கி
தாங்கவேஇடித்துமாபோல் தானதைபாண்டந்தாட்டே. (உ௱௫)

ஊட்டிடுதானிநீரில் ஒருமையாய்ச்சொல்லக்கேளாய்
நாட்டினிற்கருடமூலி நன்னிலப்பனையும்அந்தி
சாட்டிடுசங்குசின்னி சாரணைக்குன்றிவெள்ளை
மாட்டிடுகண்டங்காரி மாதளைநிலவேம்பென்றே. (உ௱௬)

வேம்புடன்குப்பைமேனி வில்வவேர்கிழ்நாய்நெல்லி
காம்பதுஅழிஞ்சில்நாவல் கரிசலாங்கண்ணிதுத்தி
ஆம்பதுஆடாதோடை அல்லிபுநகொத்தான்ருதை
வேம்பதுசிவனார்வேம்பு வெண்ணொச்சிதுளசிவேரே. (உ௱௭)

வேருடன்வகையொன்றுக்கு விளங்கவேபலந்தான்கொண்டு
சீருடன்ரவியில்மூன்று நாளதுஉலர்த்திச்சேர
நேருடன்உரலில்தாக்கி நிலைபெறஇடித்துத்தானாய்
கூருடன்தோண்டிவேறே குணமதாய்வடிதான்கட்டே. (உ௱௮)

கட்டியமாவைக்கொண்டு கருதிடுமுன்புநீரில்
அட்டிசெய்யாதேபின்பு அருளுவோமூலச்சாறு
தட்டிடுபிரமிச்சாறு தைதவேளைஅவுரிதுரி
வொட்டியதும்பைக்காட்டு அகத்தியும்பொன்முசட்டை (உ௱௯)

அகத்தியும் மணித்தக்காளி அடவுடன் வகைவகைக்கு
துகத்தியசாற்றில்வீதந் துரிதமாய்ப்பலம்இரண்டாம்
சுகத்தியமாகஇந்த சாறதைநீரிவிட்டு
அகத்தியம்இன்னஞ்சொல்வோம் அகத்தியன்உரைக்கக்கேளே (உ௱௰

உரைக்கவேகடுக்காய்க்கண்டந் திப்பிலிச்செவியம்உற்ற
விரைக்கவேமதுரங்கோஷ்டம் வெட்பாலையரிசிகோலம்
நிரைக்கவேதேவதாரம் நிகழ்பெறுமாஞ்சில்சிங்கி
தரைக்கவேசாதிக்காயும் தான்றியும்ஏலமாமே. (உ௱க)

ஏலமாம்புழுகுநாவல் இருவிதாவியுமேயாகும்
வாலரோசினையுமாகில் கஸ்தூரியன்பாய்வீதம்
ஞாலமேவகைவகைக்கு நனிமாய்நிறுக்கன்றன்று
சாலவேவாங்கியிதும் சட்டியில்வறுத்துக்கொண்டே (உ௱உ)

கொண்டுநீஇடித்துத்தூளாய்க் கொட்டிடுமுன்சலத்தில்
நன்றுநீசொல்லக்கேளு நவிலுவோம்கடைசரக்கு
வண்டதுவாளம்வீரம் மஞ்சளுந்கெந்தகநம்
துண்டதுபூரம்சாது லிங்கமும்பூரமாமே, (௨௪௩)

பூரமுமுதலாய்வாங்கிப் புகலக்கேள்வகைவகைக்கு
நிம்வேவருகன்னானு திருத்தமாய்த்தூளாய்ச்செய்து
கூறநீவமுன்சலத்திற் கொட்டியேபின்புகேளு
ஆரபோமணக்கு அவ்வெண்ணெய்ப்படியண்டாமே. (௨௪௪)

படியதாண்டதாகும் பாங்குடன்நீரில்தாக்கி
வடிபெறமுன்னுநாளும் வன்னியம்மவிபில்வைத்து
கடிபெற அடுப்பிலேற்றிக் காலாக்கினிமூன்றுசாமம்
அடிபெறகொதிக்கக்காய்ச்சி கண்டியேபடியண்டாமே. (௨௪௫)

கண்டதாம்பாகமானல் இறக்கியேஆறவைத்து
கண்டுநீவடிதான்கட்டிக் கலசத்தில்அதனைத்தாக்கி
நன்றதாய்க்கமலம்வைத்து நாயகிப்பூசைச்செய்து
என்றிடும்நோய்தனக்கு எண்ணெயைக்கொடுத்துப்பாரே (௨௪௬)

கொடுக்கிறவிதமேதென்றால் குழந்தைக்குஅதிகாலத்தில்
நடுக்கிறஎண்ணெதன்னில் நாலதுகழஞ்சுவாங்கி
துடுக்குடன்நவநாளுந்தான் துலங்கவேகொடுத்துசியும்
வெடுக்கெனஅநீதபத்தியம் விளக்கிடுங்குணத்தைக்கேளே. (௨௪௭)

குணக்குறிகுழந்தைப்பெற்றத் தாய்தனக்கென்னபத்தியம்
மணங்கமழ்பீர்க்கன்காயும் வறுத்தநேர்உப்புமாகும்
பணைக்கலாம்வெந்நீராகும் போசனம் ஆறலாகா
விணங்கவேலவங்கப்பூவும் மிளகுடன்காயங்கூட்டே (௨௪௮)

கூட்டலாய்யிருபோதன்னம் கொள்ளுடன்அகத்திக்கீரை
நாட்டவேடசையும்டோகம் நவையுமும்புளியும்ஆகா
தேட்டமாம்பெண்ணுள்தன்னை தெளியபந்தியந்தானசொல்லு
வீட்டைவிட்டுழலவேண்டாம் மிகுத்தநோய்சிதறிப்போமே. (௨௪௯)

போகுமேயெண்ணெயுண்டுப் பின்புமேநவநாள்தன்னில்
ஆகுமேதேகவச்சம் அதிகமாம்பொன்போலாகும்
தாகுமேபத்யமாறி நாளதுசென்றதானல்
வேகமேநீங்கிப்போகும் விளங்கொளிசடலமாமே. (௨௫௰)

நீர்மாந்தகுணம் அதேகலமாந்தம்

அறுசீராசிரியவிருத்தம்,

நளிர்த்துகுளிருஞ்சலித்துவரும் நாவில்நீரும்ஒக்காளம்
கழிந்துவயிறுமிகப்பொருமுங் கைகால்மெய்யுந்தினவெடுக்கும்
மெலிந்துஉடம்புமிகபருக்கும் மெதுவாய்ப்பேசும்வணக்கமதாய்
தெளிந்து சிரிக்கும்நீர்மாந்தந் செய்குணங்களிதுதானே. (உருஅ)

நீர்மாந்தகுணம் அதற்குகாலனை தன்வந்திரி

எழுசீராசிரியவிருத்தம்.

தலையதுநோவாய் முகமதுமினுக்கும் தவிக்கவேமலஞ்சிறுத்திட்டு முலையதுமுகவா துடம்பெலாங்குளிர்ந்து மூத்திரங்குறிகடுத்திறங்கும், மலைமருந்திச உள்ளிமுக்குட்டை பெய்குசா வெருவ்வொன்றேருர் உழக்காய், குலவிளக்கெண்ணை தனிவெளித்தருந்த கொடியநீர்மாந்தமுங்குணமே. (உருஉ)

நீர்மாந்தத்துக்கு வேறு ஔஷதம்.

எண்சீராசிரியவிருத்தம்.

நொச்சியிலை வேளையிலைக்குப்பைமேனி துளசியிலையும் வேம்பிரட்டித்தும்பையோடு, பச்சிலையாய்க்கொண்டுவந்து வெதுப்பியேதான் பதமாயசாறுவாப் பிழிந்துக்கொண்டு, உச்சிதமாய்மினகுள்ளி வசம்போடோமம் உகந்துவருமநற்சாற்றில் அரைத்துக் காய்ச்சி, நிட்செயமாய்ப்பாலகர்க்குக் கொடுக்கவேதான் நீர்மாந்தம்போகும் நித்தன்முனிசொன்னதே, (உருகூ)

நீர்மாந்தத்துக்கு வேறுஔஷதம்,

தன்வந்திரி

அறுசீராசிரியவிருத்தம்,

மாந்தம்போகக்கருவேலி மகத்தாஞ்செவியங்கியாமுமிட
வாய்ந்தநொயும்நீர்மாந்தம் வணங்கியோடும்பண்டிதரே
நோய்ந்தஇதுதான்அறிவீர்கட் சொன்னமொழியுந்தப்பாது
வந்திழைநீர்இந்நூல்போல எவருஞ்சொல்லார்அறிவாயே. (உ௬ச)

நீர்மாந்தத்துக்கு வேறுஎண்ணெய்

எண்சீராசிரியவிருத்தம்.

பார்க்கவேவெதுப்படக்கி சிற்றம்மாளின் பச்சிலைநீர் துணைசாணாக்கி, வார்க்கவேவுளையாவரைக்குச் சார் படிகாலாகும் வளமாக எண்ணெயதுநாழியொன்று, நீக்கவேவசம்புள்ளி மஞ்சளுந்தான் சே-

ர்த்துவகைக்கனைபலமாய்க் கூடக்கூட்டி காக்கடுகுத்திளக் காய்ச்சி றக்கிக் காண்டியிடமூன்றுநாட்சலமாந்தம்போம், (உருரு)

நீர்மாந்தத்துக்கு வேறுஎண்ணை.

நிலமண்டிலவாசிரியப்பா,

சீறியராட்சசன் சிறையினில்வைத்த
நாறிய நல்லிலை நாட்டி லுள்ளோனை
மீறியமிரட்டிலை வீறுடன்இரண்டுங்
கூறியஇதனைக் குணமுடன்நம்பே (உருசு)

எண்சீராசிரிய விருத்தம்.

நம்புவதுவெதுப்படக்கி காக்கைமல்லி நல்லிலையுஞ் சமனுகச்சாறுவாங்கி, வெம்பியதோர் வேல்விழியாள்மீதுறையும் வேறுவெருவாசமுடையோகி குதிரைப்பல்லன், துன்பமறநறுக்கிவாய்கழுஞ்சுவிதம்தூக்கிடுசாஎண்ணைசேர் சமனுய்சேர்த்து. தென்புடனேஎரியிலிடுமெழுகதாக தினமுமொரு காசெடையாய் குளுக்கிடாயே. (உருஎ)

இதுவுமது வேறுபிட்டவியல்சாறு.

குளுக்கிடுவாய்முலைப்பாலில் மூன்றுநாளுங் கூப்பிட்டேயோடிவிடுஞ் சலமாந்தந்தான், அலக்கமறும் பிள்ளை மாந்தளிர்போ லாகும் அதைவிட்டு இன்னமோரளவுகேளு, கலக்கமறதிப்பிலியு மிளகுநாளுங் கனமானஇந்திலையில் பிட்டவியல்செய்து, நலக்காமல்திரிபொழுது வார்த்தாயானால் நாடிவந்த சலமாந்தம் நமிங்கிப்போமே. (உருஅ)

நீர்மாந்தத்துக்கு வேறுஎண்ணை,

அறுசீராசிரியவிருத்தம்.

சிற்றாமணக்கெண்ணைப் பலம்பதிகமுமபூரம்விராகனொன்று
வற்றாசுத்தித்தான்செய்த வளம்விராகனெடையைண்டு
பற்றாவெள்ளைமிளகதுவும் பகரும்விராகனெடையைண்டு
சற்றைகுழலாளேலவங்கம் கதித்தவிராகனெடையைண்டே. (உருகூ)

எடையேகொஞ்சம்எண்ணெயைவிட் டிதமாயரைத்தெண்ணையிற்கலந்து
கடையில்லாமல்ஒருகாண்டி தானேமூன்றுநாட்கொடுக்க
கடைபோல்திறந்தசலமாந்தம் மாறிப்போகுமடவன்ன
நடையாய்ப்பொரிமுளகுக்கீரும் தல்லச்சாதமுண்டிடுமே, (உசா)

விஷமாந்தகுணம்.

சிறியவன்வயிறிறைந்து சினத்திடும்உருட்டிப்பார்க்கும்
கருவுடன்பெற்றதாயார் கையினிற்றங்காப்பிள்ளை
அறிவுள்ளமேனிவாடி அரைக்கின்கீழ்குளிர்ந்திருக்கும்
வெறியெனவெருவும்வேர்க்கு விஷமுள்ளமாந்தந்தானே, (உசாக)

வாந்தியும்வயிறுபோகும் வாகுசேர்விழியுஞ்சோரும்
மாந்தியேசோர்ந்துவீழ்ந்து வயிற்றிலேவலியுண்டாகும்
சேர்ந்திடுமலமூர்ந்தாலுஞ் சிக்கியேவயிறுபோகும்
ஆய்ந்திடும்நூல்வல்லோர்க்கேள் அதுவிஷமாந்தந்தானே. (உ௬உ)

சிறுபலேபோல்வயிறிளையும் சிறக்கப்பார்க்குங்கண்சொருகும்
பாறிவயிற்றில்நோயதனால் பறந்துப்பிள்ளைஓய்ந்திருக்கும்
ஆறியாறிச்சுரங்காணும் அடுத்தவாந்திவயிறோடும்
தேறீர்இதுவிடமாந்தமெனச் செப்பீருலகிற்பண்டிதரே (உ௬௩)

விஷமாந்தத்துக்கு ஔஷதம்,

கூறும்ஓமம்பொடுதலையுங் குளிர்ந்தமஞ்சளுந்திரோச்சில்
வேறுவேளைவேர்சமனாய் வெருத்தவுள்ளிவசம்பினோடு
ஆறநறுக்கிவறுத்ததனை அளவாய்க்காச்சியுண்டிடவே
பாரமானவிஷமாந்தம் பறந்தேயோடுங்கண்டாயே, (உ௬௪)

போர்மாந்தகுணம்.

போர்மாந்தத்தின்குணங்கேளு பொருமிப்பொருமிவயிறுமுழுகும்
மார்பைத்துடிக்குந்தலையசைக்கும் வயிறுவலிக்குமிகசோரும்
நேரோசத்தியுண்டாக்கும் நெற்றிநரம்புபுடைத்திருக்கும்
பாரோர்அறியபாலகர்க்குப் பரிந்தேயிதனைப்பார்ப்பாயே, (உ௬௫)

வாயுடன்நெஞ்சுலர்ந்து வயிறதுகழியுமாகில்
சாயவேயுடம்புசேர்ந்து சடுதியிற்பொருமிஊதும்
காயமும்வாடிதானுங் கட்களுமலர்ந்துமூடும்
மாயப்போர்மாந்தமென்று வகுத்திடுந்தெரியத்தானே (உ௬௬)

வெண்பா,

பொருமுங்கழியும் புரண்டுவலியுண்டாகும்
மருவிமுலையுண்ணு மயக்கும்—வெருவிமிக
சத்திசெய்யுங்கட்குழியுந் தாகமிகவெதும்பும்
வற்றியிடும்போர்மாந்த மாம், (உ௬எ)

அறுசீராசிரியவிருத்தம்.

ஏற்றேயிருந்துமிகக்கழியும் இடையிற் சுரமுந் தான்தோன்றும்
தோற்றும்உடலைத்தான்உருக்கும் தோன்றும்விலாவுமுதுகெலும்பும்,
வேறோர்உடலாய்சத்தியுண்டாம் மிகுந்தமலமுமேயொழிக்கும், கூற்
றாகும்போர்மந்தக் குணமிதுசுதற்குப்பொல்லாதே, (உ௬அ)

போர்மாந்தத்துக்கு மருந்து

வெண்பா,

தின்னசமதாகத்தைச் செவ்வறுப்பாய்ந்துளாக்கி
வெந்நீர்முலைப்பாலில் மேற்பொடியிட்டுண்ணப்
பொருமல்கழிச்சல் போர்மாந்தம்வாந்தி
ஒருகொடியிற்போமென் றுரை, (௨௬௯)

போர்மாந்தத்துக்கு வேறு மருந்து,

பாவட்டைக்கழல்கொடியும் பண்பாய் இவைமூன்றும்
போவெட்டிவேறும் பொங்கமாய் நீக்காட்டைப்
பாக்களவுவெந்நீரிற் பாலகருக்கீந்திடவே
போக்கும்போர்மாந்தமது போம், (௨௭௰)

போர்மாந்தத்துக்கு வேறு மருந்து,

கோழிக்கல்லீரற்கல் கூறுநற்சீரகமும்
தாழ்வில்லாஇலவங்கந் தானையாய்த்-தோழீகேள்
பாலில்அரைத்துண்ணப் பாரிற்போர்மாந்தம்
வார்க்குமாந்தம்போமாம். (௨௭௧)

போர்மாந்தத்துக்கு வேறுமருந்து

அறுசீராசிரியவிருத்தம்.

உப்பைவறுத்துக்கொட்டியபின் உத்தாமணியுந்தும்பையிலை
செப்பானவெற்றிலையும் சோமனைய்வதக்கியதை
இட்பமாகநீர்வாங்கி செடியிற்கூனன்வசம்புரைத்து
அப்போதீயைப்போர்மாந்தம் அகலுமென்றேஅருளினரே, (௨௭௨)

போர்மாந்தத்துக்கு வேறுஎண்ணெய்

காட்டுமல்லிகைசருள்ளிக் கருஞ்சீரகமுங்கடுக்காயும்
நாட்டுக்கடுகுரோகணியும் நல்லவச்சிரப்பால்விளக்கெண்ணெ
கூட்டிஎரித்துப்பாலகர்க்குக் கொடுக்கமாந்தம்போர்மாந்தம்
ஓட்டிவிடுங்காண்இந்தெண்ணெ உலகோர்க்குண்டுசெய்துகொடே, ()

போர்மாந்தத்துக்கு வேறு எண்ணெய்,

ஏறுஞ்சத்திச்சாரணைவேர் இதமாய்எண்ணெநாழிக்கு
தாறுங்கூனன்முதுகுள்ளிந் தனித்துவசம்புவிருகனைடை
ஏலஅரைத்துபெண்ணெயுடன் எரித்துபாலர்க்கீந்திடவே
சோருமாந்தம்போர்மாந்தம் சொல்லாதோடிப்போய்விடுமே. (௨௭௪)

போர்மாந்தத்துக்குஞ் சவலைக்கு வேறுமருந்து.

கூனன்முதுகுவசம்புள்ளிக் கூறும்ஓமம்நறுமேவலி
மானேபொடுதலைவாரமடையும் வளரும்வெற்றிலையின் காம்பும்
காணேகிரும்புகரிக்கியிட்டுக் காய்ச்சிச்சவலைப்பிள்ளைக்குந்
தானேகொடுக்கப்போர்மாந்தம் தங்காதோடிப்போய்விடுமே. (உஎரு)

போர்மாந்தத்துக்கும்வாந்திக்கும்வேறுமருந்து

எண்சீராசிரியவிருத்தம்.

வசம்புடனேமயிலிறகுசாம்பலாக்கி வசமாக வேப்பீர்க்கில்முலைப்பால்வார்த்து, கசமாகநறுங்கியனை பிழிந்துசற்றே காதலுடன் தேனுமொரு துளியேகுத்தி, நிசமாகசீரகமுங் கிராம்புசேர்த்து நிண்ணயமாய் நிம்பவிரைப் பொடிமேல்தூவி, வசமாகவேபருந்த மருந்தில்மாந்தம் வல்லபோர்மாந்தமொடு வாந்திப்போமே (உஎசு)

போர்மாந்தத்துக்கு வேறுகியாழம்,

அறுசீராசிரியவிருத்தம்.

நொச்சில்வேர்க்கு நுணாவேர்க்கு நுவல்மாவேர்க்குப் புளிவேர்க்கு
மிச்சமானவேப்பீர்க்கு மீறுங்கொடிவேலியினீர்க்கு
இச்சைபொடுதலையின்கொடியும் இதமாய்வகைக்குஒருபிடியும்
செச்சைப்பூண்டுநாட்டெடைதான் திப்பிலிநாட்டெடையொன்றுமே

ஆமேபாண்டத்தினிலிட்டு அப்புநாலுபடிவிட்டு
காமேதானைபடியாக காய்ச்சியொருசங்கந்திசந்தி
போமேமூன்றுநாட்கொடுக்கப் போர்மாந்தம்விட்டேபோகும்
தாமேஇச்சாபத்தியஞ்செய் சகலநோயுந்தான்போமே, (உஎஅ)

பால்மாந்தகுணம்,

கண்ணுங்குழியும்செவிதாமுங் கருத்துமயக்கித்தோனழையுண்டாம்
புண்போல்உதகந்தானெருந்து புளித்தேகழியும்வயிறூதும்
பண்ணூர்மொழியும்பால்மாந்தம் பாரில்இந்நோதீரவென்றால்
அந்நாள்ஆவின்நெய்தனிலே அன்பாய்வைக்குந்திறஞ்சொல்வாம், ()

பால்மாந்தகுணம் அதற்கு ஔஷதம்

எழுசீராசிரியவிருத்தம்.

பாலைத்தக்கழியும் பாலைதயெடுக்கும் பாதவித்திடும் பலவிதமாய்ச், சாலவேகரங்கால் வெளுப்பிடுங்குளிருந் தலையெடுத்திராமலேயய

ங்கும், சிலமாய்நாயார்வெண்ணமிருந்து திகழ்வெபாடுதலையின்காய் வறுத்துக். கோலஇந்துப்பு வசம்புள்ளிமிளகு கொள்சமன்கொடுத்திடகுணமே.
(௨௮௰)

செரியமாந்தகுணம்,

அறுசீராசிரியவிருத்தம்.

மிக்கக்காய்ச்சல்தலைவலியும் மிகவேவயிறுநொந்தழுகும்
நக்கமலமாக்களைத்தாற்போல் சாலக்கழிந்துகண்ணைக்கண்
தொக்கப்பக்கந்தான்படுத்து சோருங்கிளைத்தண்டதுபோல்
சிக்கென்றிலங்குமுகமாதே செரியாமாந்தகுணமிதுவே, (௨௮௧)

செரியாமாந்தத்துக்கு கியாழம்,

ஆமெவசம்புசடாமாஞ்சில் ஆனைஉள்ளித்திரிகடுகு
பூமேஓமம்கருஞ்சீரம் புழும்ஆமையோடெல்லாம்
தாமேயிடித்துப்பொடியாக்கித் தண்ணீர்காய்ச்சிக்கொடுத்திடவே
போமேசெரியாமாந்தமெலாம் பலத்திட்டோடுங்கண்டாயே. ௨௮௨

செரியாமாந்தத்துக்கு வேறுநெய்,

வேலிப்பருத்தியிலைவாட்டிப் பிழிந்துமிளகுவசம்புள்ளி
சாலஅரைத்துநெய்துளிவிட்டுத் தானேயருந்தகுணமாகும்
ஏலும்எருமைவெண்ணெயுடன் இசைந்தமருந்திஹுடன்இஞ்சிக்
கோலங்கேளும்பெருந்தும்பைக் கூட்டியருந்திடகுணமாமே (௨௮௩)

செரியாமாந்தத்துக்கு உப்பலுக்கு வயிற்றுவலிக்கு
வேறு கியாழம்,

எண்சீராசிரியவிருத்தம்.

ஓமமுடன் கனக்கோஷ்டம் காசுகாஜும் உயர்வசம்புங் கருக்கிட்டுக்கியாழமாக்கி, காமமுடன்அருந்திடவே செரியாமாந்தம் கழிக்சுதுமேபோமென்றுக் கருதிச்சொன்ளும், ஓமமுடன் உப்பலும்போம்வலியுந்தீர்ந்து சதிருடனே உண்டதெல்லாஞ் செரிக்கும் பிள்ளை நாமமுள்ளச்சொற்கேட்டு நாமுஞ்சொன்னேம் நலமாகும்புவியோர்க்கு நன்மைதானே.
(௧௮௪)

கட்டுமாந்தகுணம்,

தாயார்முலையில்வாய்வைத்துச் சற்றேஉண்ணுந்திகைத்திருக்கும்
ஓயாதழுகைசிற்றிருமல் உள்ளேசுரமுமிகவுண்டாம்

சேயாமலமுந்தேசலங்கட்டிச் சிக்கப்பண்ணும்பசியில்லை
மாயாமசக்கும்இதுகட்டுமாந்தமென்றுவகுத்தனரே, (உஅ0)

இதுவுமது - எண்சீராசிரியவிருத்தம்.

கொட்டாவி நலோநோயுமலம்போகாமல் குறுமேவர்ணை வயிற்றுவலிக்குடலிரைச்சல், தொட்டாலும் உடலெங்கும் கனல்போற் காயுந் தூக்கமதுபோவிருந்துசோர்ந்துமாந்தி, பட்டாலே வயிறுமிகக் கழிக் கிடாமற் பலநாளும்இப்படியே மலச்சிக்குண்டாம், மட்டாருங்குழல் மடவீர் கட்டுமாந்தம் வகையறியும்வாகடநூல் வல்லோர்தானே. ()

கட்டுமாந்தத்துக்கு-கியாழம் அறுசீராசிரியவிருத்தம்.

சிந்தில்தண்டின்களிப்பாக்கும் சிவைநீவநுங்கடுக்காயும்
காய்ந்தசுக்குரோகணியுங் காயும்சீரிக்கொறுக்கவிட்டு
வந்துமுலையாய்இச்சீரை எட்டொன்றாக்கிக்கொடுகெட்டு
மாந்தமானசுரமும்போம் வயிறுங்கழியுங்கண்டாயே. (உஅள)

கட்டுமாந்தத்துக்கு வேறு எண்ணெ.

அடுமேசிற்றாமணக்கெண்ணெ அளந்துக்கால்படிதானதிலே
கடுமேஅகத்திதுளசியுடன் கதித்தகைகழற்கொடியும்
வடுமேநொச்சில்செம்முள்ளி டணித்தக்காளிச்சபருகை
கொடுமேஇடித்துச்சார்படிகால் கூட்டிக்கடைசாக்கைக்கேளே. உஅஅ

இதுவுமது.

கேளேகடுகுரோகணியும் கிளருங்கடுக்காய்ச்சீரகமும்
வேளேகரியசீரகமும்வெண்காயம்வெள்ளைப்பூண்டும்
பாளேவசம்புசூதகாப் பாளின்பட்டைச்சாறினை
வளேவிறுகனைமுன்று இடித்துப்போட்டிவனம்பாரே (உஅகூ)

இதுவுமது,

பாரேசதுரக்கள்ளிப்பால் பரிவாயொருநாண்டிக்கூட்டி
தாரோகாய்ச்சிவடிகொண்டு தனயர்க்கொருநாட்டைகொடுக்க
வாரோகழியும்அந்திதனில் மிளகுசாம்பலுஞ்சுக்கும்
நீர்வார்காய்ச்சியொருசங்கு நீயிடுகட்டுமாந்தம்போமே. (உகூ0)

கட்டுமாந்தத்துக்கு வேறெண்ணெய்
எண்சீராசிரியவிருத்தம்.

* அடவியினில்திருடி * பலைவர்க்காவிப்பால் அவையொவ்வொன்றுருழக்களந்துகொண்டு, கிடமுடன் ஆமணக்கெண்ணைநாழிகூட்டித் *திரிபலைவெள்ளுள்ளிவிராகனிடையிரண்டு, பொடிசெய்துபோட்டெண்ணைதலையெரித்துப் புகட்டுமோர் காசெடைமேல் விலாவிற்பூசத், தடமுடையக்கண்டுமாந்தங்கணபேதங்கட் சாராதென் றுமைக்காணேர் சாற்றினரோ, (உகூக)

* அடவியில் திருடி-சதுரக்கள்ளி * மலைவர்க்காவி-வெள்ளாடு.
திரிபலை-கடுக்காய்-தான்றிக்காய் நெல்லிக்காய்,

தலைமாந்தகுணம்-அறுசீராசிரியவிருத்தம்,

கைகால்குளிர்ந்துதாம்பொருமிக் கனக்கப்பார்வையுண்டாகி
மெய்காண்வேர்வைமுகத்திலெழும் விரைந்தேநவலிக்கும்பலவிதமாய்
பொய்யேப்பங்கொட்டாவியுடன் புண்போல்நாசிநீர்வடியும்
மைசேர்விழியாய்தலைமாந்தம் வந்தகுணமிதுகண்டாயே (உகூஉ)

தலையுங்கனத்துஉடலூரிக்ஞ்சரீரந்தனிலேவெவியுண்டாம்
குலையும்வலித்துந்துள்ளிவிழும் குளிருஞ்சுரமும்வேர்வைவிடும்
அலையின்புருவத்தலைநிமிரா சேஷ்டைமிகவேசெய்விக்கும்
மலையினுயர்ந்ததனத்தாளே வாதைப்படுத்துந்தலைமாந்தம் (உகூங)

தலைமாந்தத்துக்குமருந்தும் துவாலையும்

எண்சீராசிரியவிருத்தம்,

வெதுப்படக்கிப்பேய்மிரட்டிநத்தைத்தானும் வேலியிலைவெள்ளறுகுவேரோடுள்ளி, மதிப்பசகுப்பியுடன் * தேசதிப்பிலி வசட்டுடனே ஓரெடையாய் வாகாய்க்கூட்டிக், கதிப்பவிவை நறுக்கியசாறுள்ளேக்கிந்து,காய்ந்தசலததேபிழிந்துக்கைகாலங்கங்கொதிப்புடனே வலிப்பகலுந் துவாலைசெய்யக் கூசாமல்தலைமாந்தங்குணமதாமே. ()

* தேசம்-தேசபுரம் ஷை இந்தநலைமாந்தத்துக்கு ஏலாதிமாத்திரைகொடுக்க மிகவும் நன்று.

துலைமாந்தகுணம் அறுசீராசிரியவிருக்தம்.

அடக்கிடாபெருகும்வாந்தி அதிகமாச்சுரமுந்தோன்றும்
முடக்கிடுமுகக்கடுப்பாய் மூரிகோட்டாவியுண்டாம்
விடக்குமேவலிப்பெடுக்கும் விரைவிரைத்திருக்கும்வேர்க்கும்
அடக்கிடாதுலைமாந்தத்தை அறிந்துநீரடக்குவீரே (உகூரு)

துலைமாந்தத்துக்குக் காந்தாதிக்கியாழம் தன்வந்திரி

எண்சீராசிரியவிருத்தம்,

விரண்டோடக்காந்தாதிக் கியாழஞ்சொல்வோம் * மெய்யுதகம் * பெருமருந்து * சிற்றேரண்டம், பிரண்டோட * நரிமிரட்டிக் கொட்டான்சின்னி, மேலானகடுக்காயுமாசிபத்திரி நிரண்டோட பற்படகந்தான்றிமுத்தம் திரிபாலைஅதிவிடையம் ஊசிப்பாலை, காண்டோடகருக்கிவிவை கொட்டிப்போட்டுக் கருநீவிசிலவேம்புப்பொஸ்தக்காயே

* மெய்யுதகம் சிறுநீர் * பெருமருந்து-ஈசுரமூலி * சிற்றேரண்டம் சிற்றாமணக்கு * நரிமிரட்டி கிலுகிலுப்பை.

இதுவுமது.

காயோடுபத்திரியின்தாளிசந்தான் கரியவேப்பிலை முத்தஞ் சிற்றுமுட்டி, ஏயேநதூளிடித்து அரணிற்போட்டு இரண்டுபடி தண்ணீர் விட் டெட்டொன்றுக்கி காயோடு * வயிரவனுங் கூடச்சேர்த்

சூளவேசுழிமாந்தமும் பலங்கொண்டிடில்
வாளவேசுழிமாந்தமும் நல்குமே, (௯௱௧)

இஃதென்றமொறுதொடர்.

விக்கமாந்தகுணம்-அறுசீராசிரியவிருத்தம்

தப்புறுவிக்கமாந்தந் தன்னையேபன்னக்கேளு
கப்புறுநாதுங்கண்ணுங் கனக்கவேவீங்கும்வற்றும்
ஒப்புறுநாவும்புண்ணாய் ஒப்பிலாச்சுரம்உண்டாகும்
வெப்புறுகைகால்நொந்து வெறுத்திடும்அன்னந்தானே. (௯௱௨)

மாந்தவிக்கம் விஷவிக்கம்-விஷபாகவிக்கம்-சுரம்நீர்க்கட்டு - மலக்கட்டு-கியாழம்-எண்சீராசிரியவிருத்தம்,

பாடுவோம்பூவாசம்பழுப்புசங்கம் பட்டைசீந்திற்கொடியும்துளசிசுக்கு, நீடுவோம்வாள்முள்ளிமுருங்கையீர்க்கு நீர்முள்ளிச்சாறுவேளையின்தன்வேரும், சூடுவோம்பிரமியிலைமருள்கிழங்குத் தூதுவளைச்சிறுகுறிஞ்சான் * சத்திமூலம், கோடுவோம் கருஞ்சீரம்இவைவகைக்குக் கொண்டு சமனெடையாக தூக்கிடாயே, (௯௱௩)

* சத்திமூலம் - சத்திச்சாரணைவேர்.

இதுவுமது.

தூக்கியேகியாழமிட்டுஎட்டொன்றுக்கிச்சுகமாகநல்கிறல்மாந்தவிக்கம், விக்கிவிஷவிக்கவிஷபாகவிக்கம் மீறுசுரம்நீர்க்கட்டுமலக்கட்டும் போம், ஆக்கவேமுறையறிந்து செய்தால்நன்மை அல்லாட்டால் கர்மமம்வந்தெய்தும்மெய்தும் தாக்கவேபண்டிதரோ நூலைத்தேடி சாயுச்யமகியத்திற் சார்ந்திடீரோ, (௯௱௪)

இக்கியாழம்-சிறியவர்க்கும் பெரியவர்க்குமாகும்

முக்குமாந்தகுணம் - அறுசீராசிரியவிருத்தம்,

அதுவாமுக்குமாந்தகுணம் அறியக்கேளுநிருக்கறவே
நிகமுன் * குழவிமுக்கிமுக்கி நின்றேகழியுஞ்சிய்மலமும்
புரியசுரமுமேலாடிப் பின்கால்வீங்கும்உழலையுமாய்
சதைதோல்எலும்புநரம்பிருக்க தழலாயுலர்த்திஉருக்கிடுமே, (௯௱௫)

* குழவி பிள்ளை

முக்குமாந்தத்துக்கு-கியாழம்

ஓமத்திப்பிலிமிளகுள்ளி * ஓடுங்கிஓமம்சமனாக
காமச்சீலைதனில்முடிந்து * நாழிநீர்விட்டெட்டொன்றாய்
வாமம்காய்ச்சிமுன்முடிந்த மருந்தைஅவிழ்த்துதான்அரைத்து
தாமமுன்றுவேளைநல்க சகலமாந்தமும்போமே. (௯௱௬)

ஓடுங்கியோடு-ஆமையோடு-நாழி-படி-இம்- முக்குமாந்தத்திற்குகஸ்தூரி-எண்ணெய்க்கொடுக்க-மிகவும்-நன்மை

வாள்மாந்தகுணம்,

தோலுந்திறங்கிஉடல்வெளுத்துச்சுழலுமயக்கம்உண்டாகும்
பாலு * மெடுக்கும்மெய்யிளைக்கும் பார்க்கும்போதுபலகுணமாம்
காலுங்கையுந்தான்வறறிக் கடுப்பும்வலிப்புங்காண்டிக்கு
வாலர்தன்னை உருவழிக்கும் வாள்மாந்தத்தின்குணமிதுவே. (௱௭)
* மடுக்கும்-குடிக்கும்,

வாள்மாந்தத்திற்குக்-குளிர்ச்சி-எண்ணெய்,

* வாட்சுண்டிச்சாறுவேளை மணித்தக்காளிக்கழற்சி
கரிசாலைத்துளசி * நீலிகன * சதம்சமனாய்க்கூட்டி
அரட்டியேஇடித்துச்சாறு அழக்குஒன்றாவின்னெய்தான்
ஊற்றியஒழுக்கு உண்மையாய்க்கூடச்சேரே, (௱௮)
* வாட்சுண்டி-ஆடுதின்னாப்பாலை-நீலி-அவுரி-*சதம்-இலை,

இதுவுமது,

கூடகஸ்தூரிமஞ்சள் கோஷ்டமுங்கரியசீரம்
வாடவேகடுகுரோணி வகைக்கரைவிருகன்கூட்டிப்
போடவேபொடிதான்செய்து புனிதமாகக்கலந்து
நாடவேஅடுப்பில்ஏற்றி நலமொடுகாய்ச்சிக்கொள்ளே, (௱௯)

இதுவுமது.

கொள்ளவேசத்திரன்னில் மொடுமேதுட்டைஉள்ளுக்குந்
துள்ளவேசகலதோஷஞ் சுருக்கினில்தீர்ந்துசத்தம்
உள்ளவேபாவிப்பிள்ளை உடலதுபறக்கும்பின்பு
எள்ளவின்றிக்குளிர்ந்து இன்புடன்வளருந்தானே, (௱௰)

உப்பல்மாந்தத்துக்கு-மருந்து-கட்டளைக்கலிப்பா,

குப்பைமேனியும் உப்புநசக்கியே கொள்ளச்சாறொருசடைதானும். செப்பமாகுமேஉப்பலின்மாந்தமுஞ் சீக்கிரம்ஒருநாளினில்தீர்ந்திடும், தப்பிறலும்முட்காவேளைச்சுக்குடன்தக்கஓமம்வறுத்துத்தொண்டையிட ஒப்பிலாதொரு உப்பலின்மாந்தம்போம் ஓதினார்கள்உயர்தொழிலாளியே, (௱௧௧)

துட்டுமாந்தம்-கிருமி சுழிகணதுட்காய்ச்சல்-நளிர்மாந்தம்,
புளிக்கு-எண்ணெய்-அறுசீராசிரியவிருத்தம்

வெந்தவித்தூற்றுகின்ற விளக்கெண்ணெய்நாழிதன்னில்
அந்தகனாயினச்சாறும்,அதுபடியேதான்ஒன்று
தந்தநாயுருவிவேரும் தைவேளைநாயின்வேளை
மூந்தவே*கொழுஞ்சிவேரும் மூக்கரைசாறணையின்வேரே. (௱௧௨)
* கொழுஞ்சு-கொள்ளுகாய்வேளை.

இதுவுமது.

வகைக்கொருஎவிமிச்சங்காய் அளவுசாந்தரைத்துக்கொண்டு
பகைப்பிலாவசம்புஓமம் பண்புகஸ்தூரிமஞ்சள்

பேய்மாந்தகுணம் அறுசீராசிரியவிருத்தம்,

இடிப்புடன்கைகால்நெற்றி * இம்முகம்விழியும்மூக்குப்
பிடித்திடும்பிடரிதன்னைப் பின்னித்தாள்நரம்பைப்பற்றி
வடிப்புடன்வலிப்பிழுப்பு வாயினால்நுரைநீர்வீழும்
படத்தகல்அல்குலாளே பாருபேய்மாந்தந்தானே. (௯உ௫)

* இமம்-பனி-இப்பேய்மாந்தத்துக்கு வல்லாரைநெய்கொடுக்க மிக நன்மை,

{ பட்சித்தோஷம்-மாந்தம் -சுழிமாந்தம் - வயிற்றுப்பிசம் கணம்-நாவரட்சி-காய்ச்சல்-குளிர்தொந்தசுரம்-மூக்கு க்கணம்-பால்கிறிச்சினம்-இவைகட்கு- கஸ்தூரி எண்ணெய்-கலிவெண்பா, }

ஏகநாயகன்றன் இணையடிப்போற்றிசெய்து
வாருடனேயெண்ணெ வசனிப்பேன்—யோகமுள்ள (௯உ௬)
காரோசினையும் கோஷ்டம்அதிமதுரம்
சீரத்திப்பிலி தேவதாரமுடன்—போரான (௯உ௭)
சந்தனமும்யேலம் தன்னுடனேமாசிக்காய்
வெந்தயமுஞ்சுக்கு வெள்ளுள்ளி—அந்தமுள்ள (௯உ௮)
போரானகஸ்தூரிப் பெருவசம்புரோகணியும்
பாரமுள்ளமூங்கில் பச்சைத்தோல்—சீராய் (௯உ௯)
வகைக்குவிராகனெடை வாடநிறுத்துவறுத்துத்
தொகையாய்அரைப்பதற்கு சொல்லக்கேள்-தகைமையுடன் (௯௩௰)
எருமுட்டைப்பிசாறி இசைந்தகொருச்சாற்றில்
வருநதிஅரைத்து வழித்ததனைத்—திரும்ப (௯௩௧)
விளக்கெண்ணெஓர்படியும் விட்டெறித்துத்தான்இறந்து
மலைக்காமல்நோய்க்கெல்லாம் வைப்பாய்—மலக்கமற (௯௩உ)
பிள்ளைப்பிணிக்குப் போராகதான்கொடுக்க
உள்ளநோய்போகும் ஓதக்கேள்—கள்ள (௯௩௩)
மாந்தவயிற்றுப்பிசமும் வடிவாய்இளந்தேகம்
சோர்ந்துகிடக்கும் சுழிமாந்தம்—கார்ந்தும் (௯௩௪)
நாவரட்சிக்கணமும் நளிர்காய்ச்சலுங்குளிரும்
தூவிஇரந்த தொந்தசுரம்—மேவும் (௯௩௫)
மூக்குக்கணமும் முதிர்ப்பால்கிறிச்சினமும்
பட்சியின்தோஷம் பழங்காய்ச்சல்—அக்கணமே (௯௩௬)
இத்தனைநோயெல்லாம் இருப்பிடத்தைவிட்டுவிட்டு
சத்திவிழுந்தோடுங் காண். (௯௩௭)

பதினெட்டுமாந்தத்துக்கும் சாதிக்காய்எண்ணெய்

எண்சீராசிரியவிருத்தம்.

சாதிக்காய்சாதிபத்திரிகிராம்பு ஏலம் கருகோஷ்டம் அதிவிடையம் குங்குமப்பூ, போதிக்குஅதிமதூரம் * பஞ்சமூலம் பொற்கடுக்காய்த்தான்றிக்காய் மாசிக்காயும், ஓதியநாற்கரியசீரகம் * தக்கோலம் உயர்வாலுகுராசாணிஓமத்தோடு கோதில்லாசதகுப்பைச்சித்திரமூலம்கூறுவகைக்கே யிரண்டுவிருகன்கூட்டே, (௩௩௮)

* பஞ்சமூலம்-கண்டுபாரங்கி - சித்திரமூலம் - சுக்குசெவ்வியம்* பேராத்தை*தக்கோலம் - வால்மிளகு,

இதுவுமது,

கூட்டியேஓமமது விருகன்ஐந்துக் குணமான வசம்பதுவும் விருகன்ஆறு மாட்டியேவசம்பைச்சுட்டுச் சாம்பலாக்கி மற்றமருந்தெல்லாஞ்சூரணமேசெய்து, காட்டியேகணைப்பூண் டிண்டங்கொழுந்துக் கனத்தைப்பழம்பாசி இலந்தங்கொழுந்து, நாட்டியேநுணாஇலைநாவற்கொழுந்து நல்லவிடத்தாரையிலைக் கருவேலாமே, (௩௩௯)

இதுவுமது கலிவிருத்தம்,

ஆமேசங்கிலை ஆங்*கழலின்கொடி
தேமே*வட்டத்திருப்பிக்*காந்தையும்
தோமேபாச்சோற்றிப் பேயின்பாச்சோற்றியும்
பாமேநல்லப்*பகன்றையும்ஆகுமே. (௩௪௦)

* கழல்-களச்சி*வட்டத்திருப்பி-பங்கம்பாலை-காந்தை- விஷ்ணுக்காந்தை*பகன்றை-கிலுகிலுப்பை.

இதுவுமது எண்சீராசிரியவிருத்தம்.

ஆகுமேசடைச்சியிலைக்குதிரைவாலி அழகுசிறுபுள்ளடியும் கண்டங்கத்ரி, சோகியொடுசெருப்படையும்துளசித்தும்பை சுயகோழிஅவரையுடன் ஆடாதோடை ஏகுமேவல்லாரைப் பொடுதலையும்வேளை எடுதவசிமுருங்கைவரப்பூலாபத்ராய், பாகுமேஇலைகளெலாம் இடித்துச்சாறுப் படியொன்றுஉப்பிலிவேர்பெருங்கிழங்கே, (௩௪௧)

இதுவுமது.

கிழங்கானபூதகரப் பான்தன்பட்டைக் கெடியானவாதகரப்பான்தன்பட்டை, முழங்கானதிருநீற்றுப் பச்சைவேரும் முக்யகருவேப்பிலையின்ஈர்க்குநானும், வழங்கானவகைக்குக்கால்பலமேவாங்கி வகையாகச்சூரணித்து முன்மருந்தில்சேர்த்து, குழம்பானசாறுஞ்சூரணமுமொன்றாய்க்கூட்டியே விளக்கெண்ணெய்ப்படியில்தாக்கே, (௩௪௨)

இதுவுமது.

தாக்கியேமுலைப்பால் ஓர்அழக்குவிட்டுத் தண்மையாம் பக்குவமாய்க்காய்ச்சிக்கொண்டு, தேக்கியேகரண்டியளவைந்துநாளுந்திறமையுடன் கொடுத்துபத்தியம்காப்பாயாகில், தூக்கியே*ஈரொன்பான்மாந்தந்தீரும் துடியானகணைம்எட்டுந்தீர்ந்துபோகும், நீக்கியேபெரியவர்க்கேழ்நாள்கொடுக்க நீள்மேகம்கிரந்தியெல்லாந் தீருந்தானே, (௱௪௩)

சகலமாந்தத்திற்கும்மாத்திரை புலிப்பாணி,

நான்இனிதான் இன்னமொன்றுசொல்லக்கேளு நயமானவில்வவேர் விளாவின்வேரு, மானவேநாய்வேளைக் கஞ்சாங்கோரை வண்மையாய்ச்சின்னியொடு காட்டுமொச்சை, தேனானதிருநீற்றுப்பச்சைத்தும்பைத் தெளிவானசிறுதும்பைக் கண்டங்கத்ரி, வாஞனஅழக்கருசங்கங்குப்பி வளமானநுணவேலிப்பரித்தியாமே, (௱௪௪)

இதுவுமது.

ஆமேநீ முடக்கொற்றான் வெண்காய்வேளை அடவானசாறணையுமுட்டைநாறி, தாமேநீகொழுஞ்சிப் புண்ணாக்குப்பூண்டு தயவானபிரமியொடுசித்திரமூலம், வாமேநீகொவ்வையுடன் மணித்தக்காளி வகையானகையானுங்கீழ்க்காய்நெல்லி, போமேநீஇந்தவகைவேர்கள்தானும் புகழாகக்கஞ்சநிறைபிலமாய்த்தூக்கே, (௱௪௫)

இதுவுமது.

தூக்கியேவசம்புடனே*ஓமம்சுக்கு துன்பமிலாசதகுப்பி* திரிபலாதி. ஆக்குடையதேசபுரம் *அத்தித்திப்பிலி அரத்தைகருஞ்சீரகமுங்காட்டுச்சீரம், போக்குடையபுதிவாலுழுவைதானும்பொங்கமுடன்பொல்தகக்காய்ப் புரசங்கொட்டை, தாக்குவாய்வகைவகைக்குக் கழஞ்சுதூக்கிச் * சாணங்கிச்சாற்றினால் அரைத்திடாயே, (௱௪௬)

* திரிபலாதி-கடுக்காய்-தான்றிக்காய்-நெல்லிக்காய் * அத்தித்திப்பிலி-ஆனைத்திப்பிலி * சாணக்கி-ஜனகிபூண்டு.

இதுவுமது,

அரைத்திடுவாய் * அப்பைச்சாணையும்வேளை, அழகானஅகத்திச்சாறிண்டஞ்சாறும், துரைத்திடுவாய்இருசாமம் மயனம்போலேதுடியுடனேதான்அரைத்திருபங்காக்கி, விரைத்திடுவாய்த்துவரையைப்போல் உருட்டிப்போடுவிதமாகஒருபங்கில் விபரங்கேளு, இரைத்திடுவாய்ச்சுத்திசெய்த வாளந்தானும் இதமானகடுகுரோகணியும்பாரோ, )

* அப்பை-அப்பைக்கொவ்வை

இதுவுமது.

பார்க்கவேவகைவகைக்குக்கழஞ்சுதூக்கிப் பாங்காகமுன்மருந்தில்ஒக்கச்சேர்த்து, வார்க்கவே அகத்திச்சார் * நிலவாகைச்சார் வள

மாகவிட்டரைப்பாய் சாமம்மூன்று, வேர்க்கவேதுவரையைப்போல் உருட்டிச்சேர்த்து விதமாகநிழல் உலர்த்திஎடுத்துக்கொண்டு நேர்க்க வேகுழந்தைகள்தன் பிணிகட்கெல்லாம் நிசுயமாய்த்தான் கொடுக்க த்திரும்பாரே, (௩௪௮)

இதுவுமது.

பாருநீஅப்பைச்சார் நாய்வேளைச்சார் பண்பானதுளசிச்சார் சிறுதும்பைச்சார், விருநீஎருமுட்டைநாறிற்சாறும் விதமானகாட்டு மொச்சையிலையின்சாறும், சேருநீவயிறுகட்டிப்பிணிகட்கண்டால்செயலாகும் முன்குளிகை செலுத்திப்போட, திருநீஇச்சாற்றிலெதிலாலும் திறமாகத தான்கொடுக்கத்திரும்பாரே. (௩௪௯)

இதுவுமது.

திருமேமாந்தத்தின் வகைகள்யாவும் திறமானதோஷமொடுவலிப்புக்காச்சல், ஆறுமேஅக்கினியின் மந்தந்தானும் அன்பில்லாஅநேக விதநோய்கட்போகும், கூறுமேசிசுவருத்தந்தீர்த்தோர்க்கெல்லாம் குற்றமொன்றும்வாராது வறுமைநீங்கும், வீறுமேபோகருட கடாக்ஷத்தாலே விதமாகபுலிப்பாணிப்பாடினேனே, (௩௫௰)

இவ்வேழுமொருதொடர்.

உரம்விழுந்தால்முடுகுதைலம்தன்வந்திரிஅறுசீராசிரியவிருத்தம்,
இல்லாப்*பூண்டுப்பலம்பத்து இனிவனக்கடுகுபலம்பத்து
கல்லாக்குழித்தைலஞ்செய்துக் கடுகெடுத்துப்பதபடுத்தி
பொல்லாநோய்கட்குடல்வாதம் போதும்போதும்துவாலையிட
வல்லாப்பிள்ளைஉரம்விழுந்தால் வலைபோல்பூசஉரம்விடுமே. (௩௫௧)

* பூண்டு-வெள்ளைப்பூண்டு.

மாந்தவகுப்பு-முற்றிற்று,

இனிகணம் வருமாறு

அகத்தியர் திருவடிகளேசரணம்.



அகத்தியர்திருவடிகளேசரணம்.

இ ௳ து

கண வகுப்பு.

கணம்வருமாறு அறுசீராசிரியவிருத்தம்,

ஐயதுகூடித்தென்றால் அறிவையர்துயரந்தன்றால்
செய்ய * பர்புனலருந்தி செரிசலதோஷந்தன்றால்
பையரவல்குலாளும் பசியுடனிருந்ததாலும்
துய்யதோர்குழவிகெட்டுக் கணங்களுந்தோன்றுமென்றே, (௩௫௨.)

* சேஷ்மம்*பற்புனல்-பலநீர்

கணங்களின் தொகுப்பு எண்சீராசிரியவிருத்தம்,

கணங்கட்பேர் விரித்துரையக் கேளுகேளு கனவாதகணம் பித்தக்கணங்குளிர்ந்த மணமானசேஷ்மகணம் பிளளைகட்கு, மாந்தகணம் அதிற்பிரிவுஐந்தாம்இப்பால், துணமாநீர்க்கணம்பிகாளிங்கணமும் நல்லச்சூலிகணஞ்சுழுகணமஹாகணந்தான், குணமானஊதுகணம்வரட்கணந்தான் கொதிப்புகணம் விக்கணம் இன்னங்கேளே, (௲௫௧)

இதுவுமது.

கேளேநீபிறக்கணமும் அந்தகன்தன் கணமும்மந்தார கணம்எரிகணந்தான். மூளேநீராமகணம் ஆமகணமெற்ற முக்கணம்மூலகணம் போராமத்தின், வாளேநீகணம்இரத்தகணமாம் எல்லாம் வகுத்துரைத்ததிருபஃதுமூன்றுமாக. கோளேதுஇதுதானேஆயுர்வேதக் குறிப்பறிந்தார்க் கல்லாமலமற்றோர்க்கேதே, (௲௫௪)

வாதகணத்தின்குணம் அறுசீராசிரியவிருத்தம்,

வாதகணத்தின்குணத்தியல்பை வகுப்போம்உடலும்பாரமதாய்
போதஇரைக்கும்நாவாளும் புகைந்தேஇருமுந்தாகமுடன்
பாதவரைக்கும்சூரங்காயும் பசியும்எடுக்காமலங்கருகும்
பேதமாகநீர்ச்சுருக்காம் பித்தகணத்தின்குணங்கேளே, (௲௫௫)

பித்தகணத்தின் குணம்,

கேளேபித்தக்கணத்தியல்பைக் கொடியாய்உடலும்எரிச்சலுண்டாம், நாளேஉலர்த்திமார்பிடிக்கும் நாக்குங்கடைவாய்ப் புண்ணாகும், பாளேசுரமுங்காய்ந்தெரிக்கும் பருக்கக்கழியும்மஞ்சட்போல், தாளேமயக்கும் தலைகிறுக்குங் காற்றுஞ்சேஷ்மகுணங்கேளே (௲௫௬)

சேஷ்மகணத்தின் குணம்,

குணமாஞ்சேஷ்மகணத்தியல்பைக் கூறக்கேளுஉடலெலாம்
உணவாய்திணவுமெடுத்துசொரி ஊறிக்காக்கால்வீக்கமதாம்
மணவாய்நாறும்வெடிப்புடனே மார்பிற்கோழைஇருமலுடன்
* அணமேவெடித்துப்புண்ணாகும் ஆறுதவனமிகுந்திடுமே. (௲௫௭

* அணம்-கீழ்வாய்மேல்வாய்புறம்

கணத்தின்குணம் கூறுகின்றார்.

மாந்தமுதிர்ந்துசுழிக்கும்கோ வயிறுநொந்துநாவெந்து
வந்தும்எதிரேமூச்செறிந்து இருமவிருமிசத்திக்கும்
போந்தஉடம்புபலவிதமாய் பொறுத்துபொருத்துச்சுரம்உண்டாம்
காந்தள்மலர்போல்காமுடையீர் கணத்தின்வகையொன்றுணாயீரோ, ()

* கோ-கண்-சந்தி-உவந்தி

இதுவுமது.

விழிசிறப்பேறகாகும் வெறித்ததுஉறுட்டிப்பார்க்கும்
குழிவிழுந்துச்சித்தாழ்ந்து குணுகுணும்பலவுஞ்செப்பும்
மொழிவது * மிடறுகம்மி முகவெகுறுவேர்வைஉண்டாம்
கழிவதுவயிறுகாய்ந்தால் கணைமெனக்கருதுவாயே (கடுசு)

* மிடறு-தொண்டை.

இதுவுமது,

சீதாக்தமாய்க்கழியுந் திரும்பக்கெட்டப்பால்போலே
பேதங்கறித்தண்ணீரதுபோல் பின்னுங்கழியும்வயிறுப்பும்
ஏதங்கைகால்முகங்கருகி எரிந்துகுளிர்ந்துவெதுப்புண்டாம்
கோதேஇருமலுண்டாகுங் குறிதான்அறியுங்கணங்கட்கே. (கசுஎ)

எண்சீராசிரியவிருத்தம்,

நடுங்கியதோர்பித்தமது கோபங்கொண்டு நல்லவாயுவைப்பற்றி அழுத்திக்கொள்ளும், கடிந்திருங்கபிள்ளைக்குக் கதித்தச்சூடு கனகனப்பு எந்நேரங்கைவிடாது ஒடுங்கியேவாயுலர்ந்து தண்ணீர்கேட்கும் உண்மையாய்மலபேதி வழும்பாய்வீழும், மடங்கியேஊன்றமுனி அபானவாசல் மாறுமல்எப்போதும் வருகும்பாரே, (கசுக)

இதுவுமது-தன்வந்திரி,

அறுசீராசிரிய விருத்தம்.

பாரேகணத்தைப்பகரக்கேள் பகரும்உடம்பில்சுரம்வீசும்
பாரேஉட்சுரமிதுகானே பகருங்கணம்மலம்உட்சேரும்
பாரேமார்புகூண்டெழும்பிப் பதமாய்சேகம்மிகவற்றிப்
பாரேவாயும்மிகநாறும் பதமாய்மலமும்வெட்டையென்றே. (கசுஉ)

மலமும்சலமும்மிகத்தீய்ந்து மார்பில்அதிகசுரங்காயும்
மலமும்வயிறுமிகஎரியும் வளமாய்த்தலையுமிகமயக்கும்
சலமுவான்றிதான்குறையும் சண்டாளம்போல்உட்சுழும்
தலமேபன்னிரண்டாண்டுமட்டும் தனதாய்வருகுங்கணமிதுவே, ()

* இவ்விரண்டுமொருதொடர்,

கணத்துக்குஎண்ணெ எண்சீராசிரியவிருத்தம்.

பாருநீஇக்குணத்தால் கணங்களென்றுப் பறியாகக்கண்டறிநீ புத்தியாக, சாருநற்குக்குமிழ்வேரு * சித்திரபாலை சார்ங் * கருக்கன் * காந்திவேர் * பொன்னும்பூவேர், பேரான * மதியங்கிங் கணைப்பூண்டுவேரும் போதரவாய்ப்பட்டைவகைப்பலமேதுக்கு மீதிஅறைவெமுகதுபோல் எண்ணைநாழி வெந்துபின்புபின்காணிகிஇயந்துவையே.

*சித்திரப்பாலை சிறுஅம்மான்பச்சரிசி *அருக்கன் எருக்கு* காந்தி * விட்டுணுக்காந்தை * பொன்னும்பூவேர் ஆவாலாவேர் * மதியங்கி கொன்றை.

இதுவுமது,

இறுத்திட்டஎண்ணெய்க்குப் பொடியைச்சொல்வேன் ஏலம் சிங்கம்அதிமதுரம்பலமேவாங்கி,வறுத்திடித்துப்பொடித்திடுவாய்மயனம்போல வாரிஎண்ணெமேல்தூவி குலுக்கிவைப்பாய், திருந்தா ஒரு காசெடையாய் மூன்றுநாள்தான் நோாகமுலைப்பாலில்கலந்துவாரு, தூரத்திவிடும் அபானத்தால் சொரிந்தரத்தந் தோற்றினதோர் கணமெல்லாந்தூரப்போமே. (கூசுரு)

கணத்துக்கு வேறுஎண்ணெ தன்வந்திரி,

* இணமான குணமிதற்கு மருந்துசொல்வேன் கிரியையென்ற வல்லாரைமாசிபத்திரி, கணமானவில்வமொடுவிளாவின்சாறும் கடியானஅத்திப்பால் ஆலம்பாலும், திணமான உள்ளிச்சார் * நிம்பச் சாறும் திறமானமுலைப்பாலும் ஆவின்பாலும், இணமானஆவின்நெய் வெள்ளாட்டின்பால்கேள் சிவந்தகொம்புத்தேன் கொவ்வைச்சாறே, ()

* இணம்-கணம்-தசவாயு-திசவாயுவென்பதுபோன்மருவியது

* நிம்பம்-எலுமிச்சம்பழம்.

இதுவுமது,

சாறிதெல்லால் வகைக்கிப்படி- அரைதான்வாங்கி சமர்த்தானதென்னங்காய்ப்பாலுநாழி. சாறிதெல்லாம் ஒருசட்டித் தனிலே யூற்றிச் சாதிக்காய் சாதிபத்திரி ஏலம்கிராம்பும், சாறிலே * திரிகடுகு * திரிபலாதி சடாமாஞ்சில் அதிவிடையம் மாசிக்காயும், சாறிலேவகைக்குபலம் ஒன்றுவாங்கிச் சன்னமாய்த்தூளிடித்து வைத்துக்கொள்ளே. ()

* திரிகடுகு-சுக்கு-மிளகு-திப்பிலி * திரிபலாதி-கடுக்காய்- தான்றிக்காய்-நெல்லிக்காய்.

இதுவுமது.

வைத்துக்கேள் சந்தனத்தூள் அறுகங்கட்டை வலுவான வெட்டிவேர் விலாமிச்சோடு, நைத்திறமாய் இடித்துவகைப்பலந்தான்வாங்கிக் கால்படிதான் நீர்அதிலேயிதனைப்போட்டு, வைத்துப்பார்க்கியாழமதுபாதிவாங்கி மகத்தானசாறிலே யொன்றாய்வார்த்து, வைத்துப்பார்அடுப்பேற்றிஎரித்துமேதான்மச்சமாய்நீர்சுண்டிநெய்போலாமே.

இதுவுமது,

நெய்போலாம்பதத்திலே மருந்தைக்கொட்டி நேசமுடன் பூரணமாய்க்கிண்டுகிண்டு, நெய்போலாங் குழம்பாகும்பதத்தைக்கண்டு நேசமாய் இறக்கிவைத்து தேவிதன்னை, நெய்யென்ற வாலையைத்தான்

போற்றுப்போற்று நினைவாகலட்சமுரு நீதான்ஓது, நெய்யான நெய்யிதுதான் வலுத்துப்போச்சுமிகரில்லாசஞ்சீவி இதுதான்பாரே. ()

இதுவுமது,

பாரேதான்கமண்டிநினை மண்டலமேகொண்டால் பாழான முன்சொன்ன கணமெல்லாம்போம், பாரேதான்வாரத்தால் எழுந்தநோய்கள் பன்னிபன்னிஓடுமே பின்பாருமல், பாரேதான் புளிகசப்பு வாத பண்டம் பாற்றறவுமாகாது தள்ளிப்போடு, பாரேதான்தேளை கணம் தேளைப்போலே பழுதில்லையெட்டாண்டு மட்டுண்டாமே, (கூஎ0)

இதுவுமது.

உண்டாகும் அந்நோய்க்கி இந்தநெய்யை உற்பனமாய்க்கொடுத்துவிடு பறந்துப்போகும், உண்டாகும் வாதபித்தசேஷ்மமூன்றும்ஒடுங்கியே மூலத்தில்கணமேயாகி, உண்டாமே உறுதியற்றிக் கமலமெல்லாம் ஓஓஓ புண்ணுபுட்சுமமும்வீசும், உண்டாமே உடம்பிளைக்கும் பித்தவெட்டை உத்தமமாய் எரிகுன்மம் உயர்ந்துப்போமே, (கூஎக)

இதுவுமது,

உயர்ந்துபோம் தாதுடைந்து தேகம்பாழாம் உற்பனமாய்அன்னாசம் அற்பமாகும், உயர்ந்துப்போம் * முப்பத்திரண்டாண்டுமட்டும் விட்டுவிடாதிந்தகணம் ஓஓபாரு, உயர்ந்துப்போம் ஆறுண்டுபிருயமட்டும் உறுதிபடும்முப்பத்திரண்டிற்குள்ளே, உயர்ந்துப்போம் இந்நோய்க்குஇந்நெய்யைத்தான் உட்கொள்ளமண்டலத்தின்ஓடிப்போமே

இதுவுமது,

ஓடிப்போம் பத்தியந்தான் இச்சாபத்தியம் ஓஓஓ நெய்யினுடஅதீதமெற்ற, ஓடிப்போம் கணரோகம் தேளைக்கூறும் உயர்ந்தகணம் இந்நெய்யில் அயர்ந்துபோகும், ஓடிப்போம் இந்தவகை ஆருஞ்சொல்லார் ஓங்காரப்பித்தத்தின் அதீதம்போக்கு, ஓடிப்போம் யான்உரைத்தேன் எவருஞ்சொல்லார் உத்தமியாள்அம்பிகைதன் அதீதம்பாரே, (

கணத்துக்கு வேறுகுடிநீர் - கலிவிருத்தம்.

வில்வப்பத்திரி ஆத்திவெண்காயமும்
நல்லவெந்தயம் ஓக்கநன்றாய்வரு
வல்லநல்லநீர் வார்த்துப்பின்சிரகம்
சொல்லக்காய்ச்சி கொடுகணஞ்சோருமே. (கூஎச)

கணத்துக்கு வேறுசூரியபுட நல்லெண்ணெ

அறுசீராசிரியவிருத்தம்.

சிறுபுள்ளடியுங் கழல்கொழுந்து சிறந்தஅவுரிசாறுக்கி
நறு[illegible]னபொடுதலை ஒருபிடியும் நையநறுக்கிநல்லெண்ணெ
நிறு[illegible] அரையாய்க்கதிரோன்முன் னேரேவைத்துநீயருந்த
நறுமென்குழலாய்மேல்பூச நாதனருளால்கணந்தீரும் (௬எ௫)

கணத்துக்கு வேறுஎண்ணெ-வெண்பா.

விளக்கெண்ணெவில்வம் மீறவுரிஈருள்ளி
அளக்கவகைக்கோர் உழங்காக்கி-விளக்கமுற்றுக்
கடுக்காயுங்கூட்டிக் காய்ச்சிசிறுவோர்க்கு
கொடுக்ககணம் போமென்றுகூறு, (௬எ௬)

கணக்துக்கு வேறுஎண்ணெ அறுசீராசிரியவிருத்தம்.

பொன்னுங்காணிவேறுடனே புளியம்ஈர்க்குவேப்பீர்க்கு
பின்னேஒவ்வொருபிடியதனில் விதமாய்க்கோழிஅவரையின்வேர்
சொன்னேபலமேஅரையாக துள்ளநறுக்கி எண்ணெயிட்டு
உண்ணச்சூரியபுடம்வைத்து ஓடுங்கணமும்வாராதே, (௬எஎ)

கணத்துக்கு வேறுஎண்ணெ-கலிவிருத்தம்,

கடுகருஞ்சீரகம் கடுகுரோகணி
விடுவனமல்லிகை மீறும்இண்டிலை
இடுமுலைப்பாலினில் ஈருள்ளிஉசிலையும்
கொடுவிளக்கெண்ணெயில் கூறுகணக்கே. (௬எஅ)

கணத்துக்குவேறு நெய்,

அறுசீராசிரியவிருத்தம்.

கோட்டம்நல்லெண்ணெய் நெய்யும் குறித்தசண்பகப்பூகந்தம்
நீட்டியஅவுரிதுய்யதிலக்குமிழ்கடுகுரோணி
நாட்டிலாமிச்சை மிக்க நலந்தருகிராம்புபாகம்
ஈட்டியேசாறுகொண்டு எரித்துண்ணகணம்போமின்னே (௬எ௯)
கந்தம்-வெண்காயம்.

கணத்துக்குவேறுமருந்து,

கீழ்க்காய்நெல்லிவேர்பட்டைக் கேள்கருவேப்பிலைசீரகமும்
வாழ்க்காய்ப்பச்சைநெல்லுமிதான் வகைக்கு விருகன்ஒன்றாக
மூழ்க்காய்க் குஜப்பாலிற்போட்டு முழுதும்இரவில் ஊறியபின்
காழ்க்காய்க்-காலமே-அரைத்துக்-கடுகேப்பிழிந்து-மூக்காலே. (௬அ0)
குஜப்பால்-முலைப்பால்

இதுவுமது.

காலைமூன்றுமேகொடுத்து கடுக்கசாயங்காலத்தில்
ஆலமிளகுபற்பமதாய் ஆக்கிச்சீரகமுஞ்சற்றே
சாலப்பொரியவேவிட்டுத் தண்ணீர்ஊற்றிகாய்ச்சிகொடு
வேலைப்பழித்தவிழியாளே மிகுந்தகணமும்போமென்றே, (௩அ௧)

கணைச்சூடுதணிய எண்ணெய்,

சிற்றாமணக்கின்எண்ணெய்ப்படி திறமாய்என்றுவல்லாரை
சற்றுச்சாறுபடி அரையும் நானேவெந்தயம் பலம்இரண்டு
அற்றுபசும்பால்விட்டரைத்து அந்தஎண்ணெயிற்கலந்து
வற்றஎரித்துசர்க்கரையிட்டு வார்க்ககணச்சூடுப்போமே. (௩அ௨)

கணம் இருமல் வாநாற்றத்திற்கு கியாழம்,

மணித்தக்காளிஒருபிடியும் மானேவெந்தயம்பலம்நாலு
துணிந்தீருள்ளிந்நான்மூன்று துட்டெடையெல்லாம்பொன்னிறமாய்
குணித்துவறுத்துஇரண்டுபடி தண்ணீர்விட்டெட்டொன்றாய்காச்சி
கணித்துமூன்றுநேரங்கொள் கணவாய்நாற்றம்இருமல்போம் (௩அ௩)

இங்ஙனம்சொல்லிய மாந்த முதிர்ந்து கணமாகி இரண்டுந்
தொந்தித்து மாந்தகணமாகிவருதல் கணமாந்தமென்றுகூறும்,

மாந்தகணத்துக்கு பச்சிலைச்சாறு.

எண்சீராசிரியவிருத்தம்.

நொச்சிலைத்துளசியிலை மொசுமொசுக்கை நோக்கியே மூன்றுமொரு நாமமாய்க்கொண்டு, சச்சமுடன் பிட்டவியலாகச்செய்து சாறெடுத்துஒருசங்குபாலகர்க்கு, இச்சையுடன்தான்கொடுக்க மாந்தமேதுஎழிலானமாந்தகணமோடிப்போகும், கச்சணிந்த பொற்சயில நகிலத்தாளே கடல்சூழ்ந்தமண்டலத்திற் கருதிப்பாரே. (௩அ௪)

மாந்தகணத்திற்கு வேறுகியாழம்-வெண்பா,

மாந்தகணம்போம் வல்லப்பொருமல்போம்
சேர்ந்திருமல்போகுஞ் சேஷ்மம்போம்—*காந்தி
துளசியுந்திப்பிலியும் சொல்லும்மாபுல்லுரீஇ
களசிளரித்தருந்தக் கால். (௩அ௫)

* காந்தி-விட்ணுக்காந்தை

மந்தத்துக்குவேறு மருந்து கட்டளைக்கலித்துறை.

நன்னாறியும்சிறுகீரை * வனமல்லிநாவல்இண்டுப்
பொன்னாருஞ்சங்கம்வேர்பாவட்டை * சீவிப்பொருந்து செஞ்சி

எந்நாளுங்காய்க்கின்ற வட்டைக்கிழப்பை இவைகளெல்லாம்
மின்னார்மின்னலிய மாந்தகணம்விரண்டோடிடுமே. (௯௮௬)

* வனமல்லி காட்டுமல்லிகை * மிசி-அவுரி

பொருமல் மாந்தகணத்துக்குவேறுமருந்து,

இடுமேதுளசிச்செம்முள்ளிக் தும்பைஇலையுடனே
வெடுமேரத்திரகமுஞ் சுக்குகாங்கோரை நைவேளையுடன்
கொடுமேகாக்கிப்புகட்டிடச் சாற்றைக்குழவிகட்கு
விடுமேபொருமல் மாந்தகணங்கள்விட்டோடிடுமே. (௯௮௭)

மாந்தகணம் பொருமலுக்கு லேகியம்,

விட்டிடுஞ்சாணைவேர்ப்பட்டைத்தட்டி விதமுடனே
இட்டிடுத்தேசாபுறஞ்சமன்கூட்டிச் செய்பொடியாய்
மட்டிடுத்தேனில் இலேகியமாக்கியின்னாக்கிட
பொட்டெனமாந்தகணத்தின் பொருமலும்போய்விடுமே, (௯௮௮)

மாந்தகணத்துக்கு வேறு மருந்து-எண்சீராசிரியவிருத்தம்,

புங்குமலிசெக்கில் மாவேம்பேரெட்டாக்கப் பொடுதலைவேலிக் கரு
வேப்பிலை நாரத்தைசங்கவுரிபொன்னாங்காப்பிடி ஒவ்வொன்று தானு
ம் இலையிற்கிடுக்குத்தட்டிவிட்டு, சுக்குமேனியுமிக்கோமமுமிடிந்து
தா போட்டுத்தண்ணீரும் நாழிவார்த்து, அங்கெரித்தவற்றமுடிந்த
ம்மருந்தை அரைத்துகொடு மாந்தகணம் அடங்கிப்போமே, (௯௮௯)

மாந்தகணத்துக்கு வேறுநல்லெண்ணை

கலிவிருத்தம்,

போகவேயின்னம் புகலுவோங்கேளு
ஆகமருளின் கிழங்குடன்உள்ளி
தாகவேளவுமிச்சைச் சாறுவாங்கி
ஏகவேயெண்ணை எரித்துநீஉண்ணே. (௯௯௰)

இதுவுமது,

உண்ணகணங்கள் ஓடுமேமெய்யா
மண்ணில்மாந்த கணநோய்ச்சேஷ்மம்
கண்ணிற்காண கதறிடும்பாரு
எண்ணுமேஇந்த எண்ணையைச்செய்திடே. (௯௯௧)

மாந்தகணத்துக்கு வேறுஎண்ணை

அறுசீராசிரியவிருத்தம்,

புள்ளடிப்பொடுதலைச்சார் புசிப்பதோர்தகரைச்சாறு
வெள்ளமிளகுத்தக்காளி மிகுகருநொச்சில் *பாசி

வெள்ளைப்பூண்டும்வசம்பு வெண்காயச்சாறுதானும்
தெள்ளிதாய்ச்சமன்கொண்டெண்ணெய்ச்சேர்த்தெரியுங்காலே (௧௬௨
* பாசி-பழம்பாசி

### இதுவுமதற்கு ஙியாழம்.

காலமேஇந்தஎண்ணெய்க் கடியசாயங்காலந்தன்னில்
சீலமாஞ்சுக்கோட்டோமம் சேர்த்துபொன்முசுட்டைவேளை
ஏலமாம்ராட்டுமூலம் இதமாய்த்திப்பிலியுங்கூட்டி
கோலநீர்க்காய்ச்சிக்கொள்ளக் கொடுமாந்தனமும்போமே, (௧௬௩)

### மாந்தகணத்துக்கு வேறு எண்ணெ

### எண்சீராசிரியவிருத்தம்.

வல்லாப்பிரமி செருப்படைநீர் முள்ளிமணக்கு மணித்தக்காளி மொசுமொசுக்கை, சொல்லெருமைநக்காளி துளசிதானும் துடிகோழி அவரைவெய்ச்சிட்டியெல்லாம், நல்லதோர்வகைவகைக்குப்பிடியொன்றாக நவையில்லா இலைகளெல்லாங்கொண்டுவந்து, கல்லது வைத்துப்பிழிந்து படிகால்சாறு கனமானஎண்ணெபடிஅரையதாமே, (௧௬௪)

### இதுவுமது.

அரையதாம் துமட்டிக்காய் துவைத்தச்சாறும் அறியவெண்காயச்சாறும் ஒருசெங்கை, நிரையதாம் விட்டெல்லாங்கலந்துக் காய்ச்சி நேர்கடுகுபதமாகும் போதிலேகேள், உரையதாம் கார்போக அரிசிபூண்டு கருஞ்சீரம் வசம்புவகைவகைக்குதானே, விரையதாம்விருகவொன்றாநறுக்கிப்போட்டு மெழுகுபதமானவுடன் இறக்கிடாயே (௧௬௫)

### இதுவுமது-கலிவிருத்தம்.

இறக்கியேவடி கட்டிஇருமுப
சிறக்கவேகொடு பிள்ளைக்குஅன்புடன்
வறக்கிடும்நல்ல மாந்தகணமுடன்
திறக்குமட்சரம் திருமிதுண்மையே. (௧௬௬)

### மாந்தகணத்துக்கு வேறு நெய்

### அறுசீராசிரியவிருத்தம்.

* வேலிப்பரித்திசமூலமுடன் வெள்ளைச்சாரணைக்குட்டிவிளா
மூலிவேளைவேர்வசம்பு முதியவெள்ளைவெண்காயம்
கோலிநறுக்கிச்சார் * மேதி கொடுத்தவெண்ணெதனிலெரித்து
சீலமுலைப்பால்தனில்கொடுக்க சேர்ந்தமாந்தகணம்போமே. (௧௬௭)
* வேலிப்பரித்தி-உத்தாமணி * மேதி-எருமை,

மாந்தகணத்திற்கு வேறுஎண்ணெ

எண்சீராசிரியவிருத்தம்.

விளக்கெண்ணெஒருநாழி அறுஇலைச்சார் விருப்பமுடன் ஒருநாழிதானேஆகும், இளக்கமாய்பிருள்ளிச்சாறுநாழி எழில்வில்வத்தின்கொழுந்துப்பிடிஇரண்டு, துளக்கருஞ்சீரகம் இரண்டு விருகன்தானும் துவர்க்கடுக்காய் நாலதுவும் பொடியேசெய்து, விளக்கமாம்வெண்காரம்விருகன்ரண்டு விபரமுடனேபொரித்து அதனிற்கூட்டே (௯௯௮)

இதுவுமது

கூட்டியேகொதிக்கையிலே சாக்கைப்போட்டுக் குணமாக பதம்பார்த்து தான்யிறக்கி, ஆட்டியேவடித்துவைத்துக் கொண்டுநீயும் அழகாகசங்கெடைபாய்ப் புகட்டிவந்தால், வாட்டியேஎழுந்தபொல்லா வியாதியான மாந்தகணஞ்சொல்லாமல் வோடிப்போகும், காட்டியேகைப்புபுளி கவிச்சிறச்சிக் கருதாமல் பத்தியத்தில் தாயைவையே. ()

விஷமாந்தகண விக்கலுக்கு ஔஷதம்,

* முருவிலிநன்னரியொடு வெண்காயந்தான் முநிர்வசம்பு இந்துப்புக்கடுக்காய்முள்ளி மருவியகாரத்தை எலிபிச்சை வேளை வாகான *மலைதாங்கிக்கீழ்க்காய்நெல்லி, வருவியதோர்பூசனியுமேபாச்சோற்றி வளர் * குறட்டை *மால்காந்தை வகைஒன்றாக்கி, பெருகுநல்ல நீர்விட்டுக்காய்ச்சிக்கொள்ளப் பிலத்தவிஷமாந்தகணம் விக்கல்போமே, ()

* முருவிலி-வவ்வாலொட்டி * மலைதாங்கி-பங்கம்பாலை * குறட்டை-காக்கணன் * மால்காந்தை விட்ணுக்காந்தை, (௯௱)

ஊதுமாந்தகணத்தின்குணம் தன்வந்திரி

அறுசீராசிரியவிருத்தம்,

தானேஊதுமாந்தகணம் தனதாய்உரைப்பேன்மடமயிலே
வானேகாலுங்கண்உடம்புமவளமாய்வீங்கிநரம்புண்ணாய்
ஆனேகேளாய்ச்சுரம்உண்டாய் அன்னந்தண்ணீர்க்கொள்ளாது
கானேகாலுங்கைசோர்ந்து கனத்தசுவாசஅதிகமென்றே (௯௱௧)

இதுவுமது,

அதிகமாய்ஊதுமாந்த கணமதுபனிரண்டாண்டு
அதிகமாம்அந்நாள்மட்டும் ஆம்இதுநோயின்காலம்
அதிகமாய்மருந்துகேளாய் அன்புடன்உரைப்பேன்தானே
அதிகமாம்தேவிவாலை அருளினல்உரைப்பேன்கேளே (௯௱௨)

இதுவுமது.

ஊதுமாங்கணத்துக்கு எண்ணெய்.

உரைப்பேன்எந்தன்குருவருளால் ஓ ஓமுள்ளிநீர்முள்ளி
திரைப்பேன்இரண்டுவேர்க்காயம் தேங்காய்நெற்றுப்பாலுடனே
கரைப்பேன்கையான்கரந்தையுடன் கண்டங்கத்திரிவசம்பேலம்
திரைப்பேன்வெட்பாலரிசியொடு திகழுமாதுளம்பழச்சாறே, (௪௱௩)

இதுவுமது,

பழமேவட்டத்திருப்பியுடன் பற்படாகமும்முந்தமுடன்
தழமேஒரிதழ்தாமரையும் தண்தாமரையுஞ்செங்கழுநீர்
மழமேநாத்தாமரை வல்லாரையின்தன்சாறுடனே
வழுமேவிளாவின்பிசின்வாகை மருக்காரைப்பிசினுஞ்சேரே, (௪௱௪)

இதுவுமது,

சேரேஇலவம்பிசின்சேரு செங்கத்தாரிமுருக்கன்சாற்
மாரேமாசிக்காயுடனே மகிமைகடுக்காய்அதிவிடையும்
சீரேவாலின்மினகோடு சிவந்தசாதிபத்திரியும்
வாரேஎல்லாம்வகைக்குக்கால் வளமாய்ப்பொடித்து ஒன்றாக்கே. ()

இதுவுமது,

பொடித்திடுமருந்திஞேடே புகழ்விளக்கெண்ணெய்வார்த்து
அடுத்ததோர்அடுப்பில்ஏற்றி அழகதாய்தீயைமூட்டி
வடிகட்டுகடுகுதிரண்டால் வளமாகஇறக்கிக்கொண்டு
தடுத்ததோர்தேவிமாதை தயவுடன்பூசிப்போற்றே, (௪௱௬)

இதுவுமது,

போற்றியஎண்ணெய்தன்னைப் புகழ்ந்துதட்டெடைதான்ஈய
ஆற்றியமூன்றுவேளை அழகதாய்க்கொள்ளச்சொல்லு
மாற்றியபுளிப்புகள்ளுவகைபுறபுகையுமாகா
ஏற்றியகலிச்சுஎள்ளு இவையெலாம்ஆகாதென்னே, (௪௱௭)

இவ்வேழுமொருதொடர்,

கணமாந்தகுணம் மாந்தகணமெனினுமொக்கும்,

ஜெடலமாம்கருவிலான செவதற்கின்னங்கேளு
விடலமாம்கணமாந்தந்தான் மிகுங்குழிகுணத்தைப்பாரு
அடலமதாகப்பெண்ணுள் அடவதாய்தலைக்குஎண்ணெய்
தடமதாய்த்தேய்த்துச்சுத்த சலத்தினில்முழுகிஞலே, (௪௱௮)

இதுவுமது,

முழுகியேஅன்னம்உண்டு முழுக்கெனஎழுந்தபோது
அழகியமயக்கசோப தாபமுமிகுதியாலே

தழுவியேபடுக்கமாது சடுதியில்உறக்கங்காணில்
விழுவியே * உதானவாய்வால் விரகலாந்தாரிணுமே, (சாக)
* உதானன் * நாபியில் நிற்கும்வாயு

நாகுமேஅவள்மோகத்தால் நாயகனோடேசேர்ந்து
நோகவேதேகமெல்லாம் நுசிநமல்லாடும்போது
தாகபோகத்தால்அந்த * சமானனும்வாய்வெழும்பி
ஏகிடுங் * கமலம்புக்க இறுத்திடுங்குளுமைவந்தே, (சாப)
* சமானன் -கந்தாக்குழியிற்சந்திடைநிற்கும் வாயு * கமலம் பிர
பைசொலிக்கும் ஸ்தானம்,

இதுவுமது,

குளுமையாய்எழுநாளும் கூறியதலையிடிக்கும்
எளுமையாம்பெண்ணுக்கு எழும்பிடுங்கபாலசூலை
வளுமையாம்பின்னும்எழு வளம்பெறநாள்சென்றுக்கால்
வெளுமையாய்தேகம்எகும் வெளுத்துடன்வயிறுநொந்தே (சகக)

இதுவுமது,

நொந்ததால்சூதகத்தில் நோயிதுவென்றுசொல்வார்
பந்துபோல்நாபிதன்னில் பாசிபோல்இருக்கும்என்பார்
வெந்துதான்பித்தச்சூட்டால் மிகுத்தநோர்நோயிதென்பார்
தந்திரவாய்வினாலே சன்னியும்இதுவென்பாரே. (சகஉ)

இதுவுமது,

இதுவென கணமாந்தந்தான்எறியேபெண்ணுக்கு
வதுவெனக்கருவில்பற்றி மைந்தனும்பிறந்துநாளுல்
பதுவெனமாதுக்கேதான் பாலதுமிகுதியாகும்
அதுபத்துநாளுந்தானும் அமிர்தமேபெருகுந்தானே (சகங)

இதுவுமது.

பெருகிடும்பத்துநாளும் பின்புநாள்மேலேசென்றால்
கருகிடும்மூலச்சூட்டால் கல்லுபோல்கட்டும்பாலும்
மருகிடும்அதுநாள்கொண்டு மஞ்சனும்இளைக்குந்தேகம்
தருகிடும்வாந்திவாய்நீர் தலைபதுசுழற்றலாமே, (சகச)

இதுவுமது,

தலையதுசுழற்றல்காணும் தான்வரும்நாளுகேளு
கொலையதுதந்தைதாயர் கொடுமையின்வினையினாலே
நிலையதாய்க்கர்மநோய்தான்நிலைத்திடுஞ்சிசுவுக்கேதான்
அலையுறபிறந்தபிள்ளை அஃதிரண்டாண்டுபின்பே, (சகரு)

ஆருமேஅறியநானும் அடைவுடன்நான்உலர்த்தி
பாரினில்உரலில்இட்டுப் பாய்ச்சிடுந்தோண்டிக்கொள்ளே, (௪௨௨)

இதுவுமது,

தோண்டியேதூணிநீரில் துளிர்க்கச்சேருதாக்கி
ஆண்டியேமருந்துபின்னும் அருளுமேவோம்புனல்முருங்கை
நோண்டியேதத்தைச்சூரி நாய்வேளைகுமிஞ்சான்இண்டு
வேண்டியேநிமயற்றம் நன்றாரிப்பிரமியாமே, (௪௨௩)

இதுவுமது,

பிரமியுந்தும்பைபொன்னாங் கன்னியுமொசுமொசுக்கை
நிறமையாய்வகைஒன்றுக்கு சிறப்புடன்பலம்ஒன்றாக
நிறமையாம்இனைச்சாறுய்ப் பிழிந்துடன்முன்புகிரில்
ஒருமையாய்விட்டுத்தானும் உசிதமாஞ்சாக்கைக்கேள் (௪௨௪)

இதுவுமது,

சாக்கில்வால்மிளகுநல்ல சடாமாஞ்சில்அக்கராகாரம்
திறக்கவேவச்சண்பம்பூ செவ்வியம்தாரம்கோஷ்டம்
புக்கவேரகடகசிங்கி புலத்தேள்களுக்குநான்றி
உறக்கவேகடுக்காய்சாதிக் காயுடன்லவங்கப்பூவே (௪௨௫)

இதுவுமது,

பூவதுகடுக்காய்ப்பூவும் புகழதாய்வகைக்குவீதம்
தாவதுகழஞ்சிரண்டு தனிதனியாகவாங்கி
வாவதுஇளம்வறுப்பாய் வறுத்துடன்உரலில்தாக்கி
மாவதுபோலேசாடி தோண்டிமுன்நீரில்தாக்கே, (௪௨௬)

இதுவுமது,

தாக்கியேபின்புகேளு தாமும்நிகந்திவீரம்
தோக்கியேவாளம்நாபி வெள்ளைஅப்பிரகந்தானும்
வாங்கியேபுழுகுசலாசத் துடனேகஸ்தூரிவாங்கி
பாக்கியமாகவீதம் வகைவகைப்பலங்காலாமே, (௪௨௭)

இதுவுமது,

பலமதாய் இடித்துத்தூளாய்ப் பாங்குடன்முன்புகிரில்
சலமதிற்கொட்டிப்பின்பு காற்றுதேன்இன்னங்கேளு
பலம்போமணக்கின்னண்ணை பிரியமாய்ப்படிரண்டிட்டு
வலமதாய்அடுப்பிலேற்றி வன்னியைமூட்டிடாயே. (௪௨௮)

இதுவுமது,

வன்னியைமூட்டிரண்டு சாமமும்எரிக்கும்போது
பன்னியநீர்எல்லாந்தான் பரிவுடன்சுண்டிப்போகும்
முன்னியப்படிரண்டாகும் மோசமேவாதுஉண்மை
கன்னியாம்வாலைதன்னைக் கருதிடுகண்டும்பாரே, (௪௨௯)

இதுவுமது,

சண்டிடும்பாகங்கண்டு குகூடமாய்இறக்கிஆற்றி
கண்டிடும்வடியேகட்டிக் கருதிடுங்கலசந்தனில்
பொண்டிடும்வாலைதேவிப் பூசையில்வைத்துப்போற்றி
தெண்டினையோர்களுக்குத் தீவினைபகற்றுமென்றே. (௪௯௰)

இதுவுமது,

அகற்றவேகணைமாந்தந்தான் அலறியேபோவதாக
தகற்றவேகாலைதன்னில் தாய்தனக்காறுகுன்றி
நகற்றவேகொடுத்தெண்ணெய் நாடியேபின்புஏழு
தொகுத்தவேகடிகைசென்று பிறகுபத்தியந்தான்சொல்லே, (௪௯௧)

இதுவுமது.

பத்தியமிலவங்கப்பூவும் பண்புடன்மிளகுங்கூட்டி
புத்தியாய்ப்பழங்கொருக்காய் புளியதுகூடச்சேர்த்து
மத்தியேபடிநீர்க்கூட்டி வன்னியிற்கொதிக்கக்காய்ச்சி
சித்தியாய் * லவணந்தன்னைச் சிவக்கவும்வறுத்துக்கூட்டே, (௪௯௨)

இதுவுமது,

கூட்டியேசாறுசெய்துக் கொண்டிடஅன்னம்வெந்நீர்
கட்டியேகர்ப்பசூடுக் கழன்றிடும்பேதியாகும்
நாட்டினில்மங்கையர்க்கு உண்டபின்இளைப்பில்லாமல்
மேட்டியாம்பனதுங்காக விழுந்திடுங்கணைச்சூடாமே, (௪௯௩)

இதுவுமது,

சூடதாகழன்றமற்றோ நாளையிற்காலைநேசம்
நீடதாயிருந்துபாலன் நேர்மையையுரைக்கக்கேளு
வீடதில்உதித்தமாந்த கணமதுவிரண்டுபோக
சாடிதானெண்ணெய்தன்னில் சாற்றிடுங்கழஞ்சிரண்டே (௪௯௪)

இதுவுமது.

சாற்றிடஎண்ணெய்தந்து சார்ஒருநாழிச்சென்றால்
காத்திடபேதிரண்டு தாமெனக்கழன்றுஓடும்
மாற்றிடுஅதன்பின்புக்கேள் * மாத்திரைகடிகைசென்றால்
கேத்திடலாகும்அன்னம் கொடுத்திடுஅமுர்தப்பாலே. (௪௯௫)

* மாத்திரை-ஒருநொடி

இதுவுமது.

கொடுத்திடஇந்தவிதம் கூறின*நவநாள்எண்ணெய்
விடுத்திடும்அதனைத்தள்ளி யிருந்துடன்நவநாட்சென்றால்

அடுந்துடன் ஓமம்தேய்த்து அடவுடன் தலைக்குவாரு
தொடுத்துடன் சிறுபருப்பும் சோறுமேகூட்டிடாயே (சஙசு)
* நவநாள்-ஒன்பதுநாள்

இதுவுமது.

கூட்டிடு இந்தவிதம் கோணமாதினுக்கே பத்தியம்
நாட்டினப்போதே எண்ணெய் நளினமாய்வலுக்குங்காயம்
ஊட்டிடும்சடலம்விட்டு ஓடிடுங்கணமாந்தந்தான்
தேட்டிடஇளையும்பாலன் தன்தேகமும்சுபஸ்தம்நன்றே (சஙஎ)

கணமாந்தத்திற்கு வேறுஎண்ணெய்

ஆசிரியவிருத்தம்,

திறமான வெள்ளாட்டுப்பாலுமே இருநாழி திகழ் விளக்கெண்ணெய்நாழி, திருகுகளிபலம்ஒன்றிண்டங் கொழுந்தொரு பிடிச்செண்பகப்பூமாமுடி, உறமானசாதிக்காய் லவங்கேலம் வெள்ளுள்ளி * பத்திரிப்பூண்டுடன்ஓதும் * இருசீரகம்வசம்பிலாமிச்சையும் உறுவெட்டி நன்றுறியும், சிறுநாகமுத்தமொடு பூலாக்கிழங்குடன் திவ்யமிகுகோரோசினை, சேர்க்கடுக்காயுரோகணிகோஷ்டமும் பச்சைத் திரு * நாகமுஞ்சமனதாய், சமாகவே அரைக்காசெடைஅரைத்திடுதணலிலெரிபதமதாக, தையலேபால்எண்ணெய் உண்டிடக்கணமாந்தம் நாணிவிட்டோடிவிடுமே. (சஙஅ)

* திருகுகளி-திருகுகள்ளி-பத்திரி-சாபத்திரி*இருசீரகம் நற்சீரகம்கருஞ்சீரகம்*வெட்டி-வெட்டிவேர் *நாகம் நாகேசரம்-அன்றியுமிவ்வெண்ணெய் கொடுக்கும்போது முலைப்பால்கூட்டிக்கொடுக்கவும்.

கணமாந்தத்திற்குவேறுமருந்து வெண்பா.

வால்மிளகுப்பூண்டோமம் வசம்புகருஞ்சீரகமும்
சாலக்கிராம்பு சண்பகப்பூ—மால்சரியாய்
தூக்கிப்பொடுதலைச்சாற் றுவளஅரைத்துக்கொடுக்க
போக்குங்கணமாந்தம் போம். (சஙகூ)

கணமாந்தம்வயிற்றிளைவுபொருமலுக்கு

பாலசஞ்சீவிமாத்திரை,

ஆசிரியவிருத்தம்.

சீர்கொண்டதுத்தம் வெண்காரமொடு * ரோசினைத்திகழ்கின்ற*நற்கொழுஞ்சி, சிக்குமலம்வீழ் கடுகுரோகணி * கழஞ்சுதரி சோவேசே

ர்த்துநன்றாய், வேர்கொண்டகந்தியிலை * நீர்விட்டரைத்துமே மெள்
ளஒருசாமமம்மட்டும், விசைகொண்டழுந்தி அரைசிறுபயருபோலவே
மேன்மைபெறஉண்டைசெய்து கார்கொண்டகுழலழகுபெண்ணணங்
கேயழற் காய்ந்தநீர்அநுபானமாம். கற்கம்அறிநல்லதொருபத்திரிப்பு
ட்டிலுங் கன்னியிளமை, அசிதர வார்கொண்ட மென்முலைப்பாலிலும்
இடுவதிதுவல்பிணிச் சகலசுரமும், வயிறுளைவுபொருமல் கணமாந்த
முங்வாராதுவாலசஞ்சீவியென்றே, (௪௪௰)

* சோசினை-கோசோசினை-கொழுஞ்சி-கொள்ளுக்காய்வேளை. க
ழுஞ்சுநிரி- மூன்றுகழஞ்சு*நீர்-அகத்தியிலைச்சாறு-புட்டிலி -புட்டிவெ
ல்லம்,

கணமாந்தத்திற்கு வேறு எண்ணெய்தேறையர்

கவிவிருத்தம்.

மாற்றிடுபொன்னுங்காணி வல்லாரையோ - டேற்றிடும்புளியாரைக்
கிழ்க்காய்நெல்லி-சேர்த்திடுத்தூளசிச்சிறுபுள்ளடிப்-போற்றிடும் வறப்
பூலாதகரையே. (௪௪௧)

இதுவுமது,

தகரைஒரிதழ்ந்தாமதாப்புக்கிலை அரையத்தாதுவளையம்மான் பச்சிலை
துவரைப்பீர்க்கிலைச் சூரைவெண்ணொச்சிலை - அவரைச்செந்நாயுருவிக்
காய்வேளையே. (௪௪௨)

இதுவுமது.

வேளை*முக்கிருக்கன் சேவிஆடுணாப்-பாலை* வேலிப்பரித்திமிளகுதக்
காளி ஆடாதோடைக் கருநொச்சில்நாய்- வேளைச்சின்னிவேம்பு*வட்
டப்புல்லிதே, (௪௪௩)

* முக்கிருக்கண்செவி நிலக்கடம்பு*வேலிப்பரித்தி - உத்தாம
ணி-உத்தாமணி*வட்டப்புல்காவட்டம்புல் (௪௪௪)

இதுவுமது.

புல்லிதுகணப்பூண்டு நுணாத்துளிர் சொல்லிது * பரிவாலிச்சிறுகிளை
வெல்லிது * மொசுக்கைவேர் முருங்கிலைச்சொல்லிது பொன்முசுட்
டையும்பாங்கிடே.

* பரிவாலிகுதிரைவாலி மொசுக்கை மொசுமொசுக்கை

இதுவுமது,

பாங்கிடத்திகரிப்பயட்டங்கொடி நீங்கிடத்திலக்குமிழாவரை வேங்
கிடத்தி சாவிட்டுணுக்காந்தியும்- தாங்கிடத்திசங்கங்குப்பிதாக்கிடே, ( )

டனே வகைக்குக்கால்தான், இதனைப்பார் இவையெல்லாங்கல்வத்திட்டு எழில்வெட்டிவேர்மாசிப்பத்திரிவேரும் இதனைப்பார்க்கருந்துளசி விலாமிச்சோடு இன்பமதாய் நால்வகையுஞ்சார்பிழிந்தே. (சருஎ)

இதுவுமது,

பிழிந்துமேகல்வத்தில வார்த்தனாத்துப் பிலமாக இருசாமம் விடாமல்ஆட்டு. கழிந்துமேகுன்றிப்போல் உண்டைசெய்து கண்மணிபோநிழல்உலர்த்திச் செப்பில்வைத்து, வழிந்துமேவாலேமனோன்மணியைப்போற்றி வகைபாணமாசிபத்திரி கியாழந்தன்னில், அழிந்துமேகுளிகையொன்றுக் கொடுத்துப்போடு அரஅரா முன்சொன்னமாந்தம்போமே. (சருஅ)

இதுவுமது.

மாந்தம்போம் லவங்கப்பூகியாழந்தன்னில் மேகத்தானமாந்தசுரம் வாந்திதீரும், மாந்தம்போம் முலைப்பாலில் கொடுப்பிராகில்வனைந்து வருங் குடல்படுவன் நீர்ப்பாடுதீரும், மாந்தம்போம் கரப்பான் நாவரட்சித்தீரும் வயிற்றெரிவு அன்னவிடாய்ச்சுரமுந்தீரும் மாந்தம் போம்உப்பிசமும் இருமல்போகும் மகத்துவமாம் அமுர்தமெனுங் குளிகைபாரே. (சருகூ)

இவ்வைந்து மொருதொடர்,

நீர்க்கணத்தின்குணம் அறுசீராசிரியவிருத்தம்,

நீர்க்கணக்குணமேகேளு நீரின்மேல்மனதுவைக்கும்
வேர்க்குங்கண்தாழ்ந்துசற்று வேர்வையில்வெதுப்புதோன்றும்
நாக்குவாய்வாண்டிக்காணும் நல்லநீர்கழிச்சலுண்டாம்
பார்க்கிலோநீர்க்கணத்தின் பலபலகுணங்கள்தானே, (சகூ0)

இதுவுமது·

தாகமும்கழிச்சல்உண்டாம் தலையதுசுழற்றல்காணும்
வேகமாய்ச்சுரமுஞ்சற்று விட்டுவிட்டடனேகாயும்
வாகுசேர்கண்ணுந்தாழ்ந்து வாயுடன்நாவுலர்ந்து
சோகமும்வயிற்றில்நோவாய்ச் சோர்ந்துகைகால்தண்ணீரே (சகூக)

இதுவுமது தன்வந்திரி

முகம்புறங்கால்புறங்கையு மோதிமினுமினுப்புண்டாகும்
தகைசேர்தாகமுண்டாகித் தண்ணீர்உழலைமிகக்குடிக்கும்
மிகவேமயக்கம்வெதுப்புண்டாய் வெடித்துநாவுந்தான்புண்ணாய்
மகமேர்ஒத்ததனத்தாளே வருநீர்கணத்தின்வகையாமே, (சகூஉ)
இம்மூன்றுமொருதொடர்

நீர்கணத்துக்குக் குடிநீர்- வெண்பா.

சாரணைக்காய்முங்குரட்டைக் தன்காய்பொடுதலைக்காய்
பூரணமாந்திரிகடுகு பூந்துளசிகாரணியும்,

தொங்கையபோசெகமுங் கூட்டிக்குடிநீராய்
உண்கவேநீர்க்கணந்தான் ஓடும், (சகூக.)

சுழிகணத்தின் குணம் அறுசீராசிரியவிருத்தம்,

சுழியெனுங்கணமேசொல்லில் சுழியவேசுவாசம்வாங்கும்
நளிருடன்சுரமுந்தோன்றும் * நயனம்பஞ்சடைந்துக்காணும்
தெளிவுடன்சந்துநொந்து திகைக்கநெஞ்செரிப்புக்காணும்
குழியுமேஉச்சித்தாழிற் குணம்இஃதறிந்துசொல்லே. (சகூச)

நயனம்-கண்,

இதுவுமது.

மின்னேகேளாய்சுழிகணந்தான் மேவிசுவாசம்இருமலுண்டாம்
பொன்னேமுகமும்மார்புகண்டம் புடைத்துக்காணும்உண்மையிது
சொன்னேன்வயிறுஊசல்நெஞ்சு தொண்டைநாவுமிவைவெந்து
அன்னைமுலைப்பால்குடியாமல் அலறிஅழுகும்அறிவாயே (சகூரு)

இதுவுமது.

இருமுலைஞ்செருமும்மேல்மூச்சும் இருகைகாலும்குளிர்ந்திருக்கும்
பொருமும்வயிறுதான்ஊதும் பொல்லாச்சுரமும்மிகவுண்டாம்
அரிவைமுலையுங்குடியாது அயர்ந்துவெதும்பிஅலறியிடும்
சொருகும்கண்ணும்நாவாண்டு சுழிகணஞ்செய்யுங்குணமிதுவே, ()

இதுவுமது.

வார்முயாரோகேளீர் மண்ணிற்பிறந்தபாலகர்க்கு
ஈசல்வெந்துசுழிகணமாய் இருமலுண்டாய்எதிரிளைப்பாய்
நாளைப்போலேஅறுதுவண்டு நாசிஇரண்டும்எடுத்தெரியும்
பாரிலுள்ளபாலகர்க்குப் பரிந்தேஇதனைப்பாரீரோ, (சகூஎ)

இதுவுமது,

மார்பிலேசுழியாய்வாங்கும் வாயினில்நுரையுங்கோழை
சேரிலேபிள்ளைவாங்கிச் செய்யுமேகழியும்காயும்
மூரியேமுகத்தில்மஞ்சள் முன்தலைமயக்கும்நோகும்
பாரினிறபாலகர்க்கும் பரிந்துமேபார்த்திடோ. (சகூஅ)

சுழிகணத்துக்குசஞ்சீவிஎண்ணை கட்டளைக்கலிப்பா,

பத்துக்காசெடை சண்பகப்பூவுடன் பகருஞ்சாதியின் பத்திரிக்காசெடை. முற்றுங்கேளைக்காசெடை யாவினில் மூளத்தெழுந்தகோரோசினைமூன்றுமாய், எத்துங்கேளிவைப் பொடியாய் விளக்கெண்ணை யானதில்ஓர்படிதன்னிலேயிடு, சற்றுந்தீயிற்கொதியிட்டிறக்கியே தனயனுர்க்கிடுந் தான்விதங்கேளுமே, (சகூகூ)

இதுவுமது வேறு-குடிநீர்,

கேளுந்துட்டெடை இட்டிடவேசுரம் கிறுகிறென்னவே வாங்குஞ்சுழிகணம், சூழுநோயும் இருமலுந்தீர்ந்திடும் சுளிகணைச்சஞ்சீவி இதாமென்னே, வாழும்உள்ளிவசம்பு உசிலேயின் வாய்த்தப்பட்டை இம்மூன்றும்நறுக்கியே, தாழிநீரினில்ஊறி இறுத்திடு தணியுமேசுழிதன்கணம்இன்றுமே (சஎ0)

* தாழி-மிடா

சுழிகணத்துக்கு-வேறுஎண்ணை,

இண்டு * காரி * இம்பூரவின்வேர் * கடு இதைபொடிநுறுக்கெண்ணையிலேற்றியே, மண்டுபாலுடம்வைத்தெடுத்ததை மதலேயோர் சுழிமாந்தம் அறுக்கவே, கொண்டகுன்றி மணிவேர் இலுப்பைவேர் கூர்முசக்கைத் துளசிநற் () கூவிளைக் கண்டுக்கொண்டு முன்போலே புடமிட்டுக் கலந்துண்ணச்சுழி காணுதுபாருமே. (சஎக)

* காரி-கண்டங்கத்ரி * இம்பூரல்-சாயவேர் * கடு-கடுக்காய் () கூவிளை-வில்வம்.

இதுவுமது வேறுகுடிநீர்-எண்ணை,

பாரும்சருள்ளித்துருசுடன்வந்தநீர் பாலிறக்கி இலுப்பைப் புண்ணாக்கையும், நீரிலேநனைத்தேகுழவிக்கிய நீங்கும்இருமல் இளைப்பு சுழிகணம், காரு தூது துளசிநுணாசங்கு கருதும்இண்டுப்பொடுதலைச்செம்முள்ளிச், சாரும்ஆவிநெய் சீரககற்கமும் தணலெரித்திட சுழிகணமாறுமே. (சஎஉ)

* தூது தூதுவளை.

சுழிகணம் உப்பிசம் கோழைக்கட்டு இளைப்புக்குவேறுமருந்து

அறுசீராசிரியவிருத்தம்,

குப்பைமேனிச்சாற்றுள்உப்பைக் கூடக்கலந்துவேப்பெண்ணெய்
செப்பமாகமத்தித்து தேனேமூன்றுநாட்புகட்ட
தப்பில்லாமலேஇளைப்பு தானேசுழிகணம்உப்பிசமும்
துப்புநெஞ்சிற்கோழையுடன் துயரங்கெட்டுஓடுமென்றே. (சஎங

சுழிகணத்துக்குவேறுஎண்ணெய்,

முலைப்பால்கடுக்காய்காட்டுமல்லி முதிர்ந்தஆலின்புல்லுருவி
இலைப்பால்இண்டுசருள்ளி இவையாமணக்கின்எண்ணையுடன்
நூலைப்பால்கருக்கெரித்ததனைச் சொன்னபடியேகொடுத்திடவே
சொலிப்பாய்வந்தசுழிகணங்கட் சொல்லாதோடிப்போய்விடுமே, ()

சுழிகணத்துக்குவேறுஎண்ணெய்.

கடுக்காய்காட்டுமல்லிகையும் கடியக்குமரிவெந்தயமும்
மிடுக்காய்சீரகம்இத்துடனே மேவுஞ்சாறணைசருள்ளி

மூடிப்பாய் ஆமணக்கெண்ணையுடன் மூடிகாடெரித்துக் கொடுப்பீரேல்
ஆடிப்பாய்வந்தசுழிகணைத்தான் சொல்லாதோடிப் போய்விடுமே, ௪௭௫
* குமரி கற்றாழை,

சுழிகணைக்கு-வேறு-நெய்,

நாடித்தாளி* தூதுளை நல்லச்சங்குமிலை போடு
பூநும்பொடுதலைச்செம்முளிச்சாறு புராமை ஆவின் நெய்தனிலே
சாடித்தணலில்இட்டுதின்றாய்க் காலைகொடுக்கவேமாறும்
ஆடிந்தசுழிகணைமானதெல்லாம் ஆடிப்போகுங்கண்டாயே, (௪௭௬)
* தூதுளை-தூதுவளை.

சுழிகணைக்குவேறு எண்ணெய்,

நந்தியாவட்டைவேறு நல்லநாய்த்துளசிவேறு
கந்தியாரிவேலைவேறு காட்டுமல்லிகையின்வேரு
அந்தியபுன்னைக்காயின் அளவைத்திப்பால்சேரு
சுந்திரகண்டங்கத்திரி தூதுளைநின்னியாமே, (௪௭௭)

இதுவுமது,

சின்னியுமணித்தக்காளிசெழித்தகொட்டைக்கரந்தை
கொன்னிபக்குப்பைமேனிக் கோழியவரைப்பத்ரம்
இன்னிலைவகையனைத்தாக இடித்தப்பிழிச்சாறுதும்
பன்னியமாவாது நினைக்கின்னெண்ணையைப்படுபடியென்றுமே. (௪௭௮)
* பத்திரம்-இலை

இதுவுமது.

ஒன்றகாய்க்கலந்தெரிந்து உண்மையாய்வடித்துவைத்து
துன்றியபாலகர்க்கு தூட்டெடைப்புகட்டவேதான்
கொன்றிடுஞ்சுழிகணைத்தைக் குலவியதொண்டைக்கட்டு
என்றதுந்தீரும்பத்யம் இன்பமாய்க்காத்திடாயே. (௪௭௯)

சுழிகணைசுவாசகாசத்திற்கு-இடாமும்,

* சிங்கிகர்க்கடகம் சீந்தில்சீரகம்வில்வைறு
உங்கதிவிடையங்காணும் உரோகணிகண்டங்காரி
பொங்கமாக்கைமுள்ளிப் புகல்தூதுவேளைத்திப்பிலி
கங்கைநீர்க்காய்ச்சிக்கொள்ளக் கனைந்சுழிவாசம்போமே, (௪௮௰)
* சிங்கி-கர்க்கடகசிங்கி உரோகணி-கடுரோகணி-கண்டங்காரி கண்டங்கத்திரி,

உண்டாஞ்சூலிக்கணக்கேரு உத்தசுவாசமேல்எழும்பி
தண்டாஇருமல்மிகஉண்டாம் தண்மைநெஞ்சுவாய்மட்டும்
தொண்டைநாவுமேவெந்து சோரும்பொருமிவயிறுப்பும்
வண்டார்முலையுங்குடியாது வகையாய்நாகமும்மாமுமென்றே, (௪௮௧)
* சூலிக்கணம்-கர்ப்பக்கணம்.

குலிக்கணத்திற்கு எண்ணெய்,

முகமாம்எண்ணெய்க்கால்படிதான் மூசிழ்சேர் துளசிச்சார்காலாம்
தகமாய்நிலத்தின் துளசிச்சாற் தன்மைஅரைத்தகிற்படிகூட்டு
வகமாக்கஞ்சாங்கோரையுடன் வன்னமமாசிப்பத்திரியும்
அகமாம்வில்வம்உள்ளியுடன் அன்பாய்இடித்துச்சார்பிழியே, (௬௮௨)

இதுவுமது,

அன்பாய்அரைக்கால்வகைக்குப்படி அளந்துபிறத்திதன்றுக்கி
வன்பமதிரிகடுகுடனேதான் வறுத்திடித்துக்குணஞ்செய்
தென்பாய்இரண்டுவிருகனேடை தேனும்வார்த்துக்கலந்துவிடு
உன்பாய்எண்ணெய்அடுப்பேற்றி உருகுநெய்கட்டுபதந்தனிலே, (௬௮௩)

இதுவுமது,

தனிலேஇந்தக்கடைமருந்தைத் தயவாய்ப்போட்டுக்கிண்டியிடு
வனியேஇறக்கிக்கணபதியை வகையாய்த்தொழுது அடிவணங்கி
மணியேகுலிக்கணந்தனக்கு மைந்தன்தாயைச்சரந்திசெய்து
தொனியேயமைந்தன்தொண்டைதனில் தொடுநீகாசுஎடைதானே, ()

இதுவுமது,

எடையேஐந்துமாதமென்றால் எண்ணெய்ஐந்துநாள்மட்டும்
தடையாய்இச்சாபத்யமது தனமாய்சோமஐந்துமட்டும்
இடையாய்இருக்கும்குலிக்கணம் இதனைக்கண்டுத்தீர்த்திடுங்காண்
படையாய்வருஷம்ஆனணம் பலிக்கும்ஒருமண்டலங்கொள்ளே, ()

இவ்வைந்து மொருதொடர்,

மஹாகணத்தின்குணம் இதைமாக்கெணமென்பாருமுளர்,

மூகமும்புருங்காலும்கையும் மோதியேமினுமினுக்கும
கவைகவிழ்*வெருநிக்காட்டும் கஞ்சுகண்டால்போல்மயக்கும்
மிகமிகவெதுப்பும்உண்டாய் வெடித்துகஉதடுபுண்ணாய்
சுகமிலாவருத்தந்தோன்றும் சொல்மஹாகணத்தின்வாரே, ()

* வெருநி-வெருப்பு

மஹாகணத்துக்குக்குடிநீர் எண்சீராசிரிய விருத்தம்,

சிறுகீரைவேர்க்காந்தி கீழ்க்காய்நெல்லிச் சிறுபூளைகருமுட்டைச் சீந்தில்தோடை, நறுகீரையாகிலித்தனைபுமொன்றாய நறுக்கியேநல்ல தொருபாண்டந்தன்னில், வருகீரை இலைவருப் பாகவேதான் வறுத்தத னைக்குடிநீராய் வற்றக்காய்ச்சி, இறக்கியேவைத்திறத்துக் கொடுப்பீ ராகில்திருமஹாகணமென்றேஇயம்பினீர், (௬௮௭)

பிரளிகணத்தின்குணம்-எண்சீராசிரியவிருத்தம்,

மிகுத்தபிரளிகுணத்தியல்பை விரிக்கக்கேளுசெருக்குறவே
விகுத்தமாகவயிறுவிம்மி மேமேலேப்பமுண்டாகும்

லேளண்ணே சேர் சமனாகச, வசம் உள்ளிக் கரியமணி இருவிமூலம்வ
கைக்கழஞ்சு இடித்திட்டுத்தியைமூட்டு, யெமாகமூன்போல் காசெனட்
யெவாரு நாள்மூன்றில்பிறக்கணமும் நாடாதென்றே, (சகசச)

* ஆனை-வல்லாரை கோழி-கோழியவரை குனை-கஞ்சாங்கோரை, ஜனகி-ஜானகிபூண்டு வெதுப்பி-ஒற்றைப்பேய்மிரட்டி மிரட்டி - இரட்டைப்பேய்மிரட்டி பவி-தூடசி புன்னு-சிறுபுள்ளடி உள்ளி-வெண்காயம் கரியமணி-கருஞ்சீரகம் இருவிமூலம்-வசம்பு.

வாட்கணத்தின்குணம்-அறுசீராசிரியவிருத்தம்.

நெஞ்சுஅடைக்கும் புகைந்திருமும் நிறமும்வேறோக்குக்கும்
வஞ்சம்அறமேயொருபோ வந்தேசரீரமெலாம்வெதுப்பும்
மிஞ்சும்இருமல்வயிற்றினைச்சல்விட்டுத்திடமாய்துரும்படுக்கும்
மஞ்சார்குழலாய்வாட்கணத்தின் வாறுமிதனை அறிவாயே (சகரு)

இதுவுமது,

* அத்தியில்சுரமும்தோன்றும் அழன்றுநீர்தாகமாகும்
முற்றியேசிறுநீர்தானும் முறுக்கியேவெண்மைசாணும்
சற்றுகாண்வயிறுநொந்து சிறிதுடன்கடுப்புமாகும்
வற்றிடும்சரீரமெங்கும் வாட்கணம்என்றுசொல்லே (சகசு)
* அத்தி-எலும்பு,

இதுவுமது.

நாக்கில்மஞ்சள்வெள்ளைமுள்ளு நடுவேவெடிப்புமுண்டாகும்
பார்க்கப்பிள்ளையிடுழியும் பருக்காதுடலும்இளைத்துவிடும்
மூக்கில்சளியும்இருமலுடன் முகமும்மஞ்சள்பூத்திருக்கும்
தூக்கமிகவேமயக்கமுண்டாஞ் சோருவாளிக்கணம்இதுவே. (சசஎ)

வாட்கணத்திற்கு எண்ணை - சொச்சகம்.

ஆமணக்கின்நெய்நாழி ஆனபசும்பால்நாழி
தாமணக்குமேஅரைசால் காண்கிழக்காய்நெல்லியின்சார்
வாய்மணக்குமேல் *மதூரம் வாய்த்த *கடு காண்நிசக்கு
பூமணக்கும் * வேர்காந்தி பொன்அளந்துதுவே (சசஅ)

* மதூரம்-அதிமதூரம் *வேர்காந்தி-விட்ணுக்காந்தைவேர் * கடு கடுக்காய்,

இதுவுமது,

வலியாம்பசளையுடன் வாகுபடவேசேர்த்து
இளநீர்தனில்அரைத்து எண்ணெய்தனில்விட்டெரித்து

கற்றாமரைமலர்முகமாதே சகிலம்பொற்சைலத்துறமும்
கற்றைக்குழலேமதர்விழியே கரியசீரகமுங்காலே. (௫௱௫)

இதுவுமது எண்சீராசிரியவிருத்தம்.

காலாகும்இவையெல்லாமெண்ணெயிலேபோட்டுக் கருங்கற்றாழ ஞ்*சோறுபலமுமொன்று, காலாகவமுசுத்தி செய்துப்போடுகணமாக்அ டுப்பேற்றிமெழுகுபதமாச்சு காலாங்குமரிச் சோறுசிவைக்கும்போதுக ண்டிறக்கிஆறவைத்து நாளொன்றுக்கு, காலாககாண்டிபிரா அந்திசந் திகருதிகொண்டுவரத்தீரும் நோயைக்கேளே, (௫௱௬)
* குமரிச்சோறு-கற்றாழஞ்சோறு

இதுவுமது.

திருமேபதினெட்டுக்கணைக்குடெல்லாம் செப்பெரிய அஸ்திசுரம் அஸ்திவெட்டை. திருமேமேகவனை பித்தவெட்டை தீதாகவாண்டவு டல் உலாந்ததேகம், திருமேசிறியோர்க்கும் பெரியோருக்கும் சின்ம யஞ்சோபிரமமுனி சொன்னமார்க்கம், திருமேபத்தியமாய் இருந்தாஸ் நன்று*தினகரனைக்கண்டபனிபோல்நோய்ப்போமே, (௫௱எ)
* தினகரன் சூரியன்

வீக்கணத்திற்குஎண்ணெய் அறுசீராசிரியவிருத்தம்.

உள்ளியுவசம்புஓமம் உயரதிமதுரங்கோஷ்டம்
வெள்ளியகிராம்புசுக்கு மிளகுடன்ஏலமிப்பால்
கொள்ளக்கூத்தன்குதம்பைக் கூறியவேர்வகைக்கு
யொள்ளியமிளகன்ஒன்று பொடிசெய்துபின்புகேளே. (௫௱அ)

கூத்தன்குதம்பை மூக்கொற்றிப்பூண்டு

இதுவுமது.

கேள்விதிக்கெண்ணெய்தன்னில் கிரமமாய்ப்போட்டுமேலும்
வாள்பெற்றிரண்டுசாமம் வளர்ஒளிபுடத்தில்வைத்து
நாள்சிறுகரண்டி எண்ணெய் நல்கிடில்மதலைகட்கு
காள்வினைபானவீக்க கணமதுதீருமென்றே. (௫௱௯)
* ஒளிபுடம் சூரியபுடம் மதலை பிள்ளை

அந்தகன்கணத்தின்குணம்.

உச்சிமூளைத்தனைப்பற்றி உடலெங்குமவெதுப்புண்டாம்
மிச்சமாகஉலரும்விழிகளிரண்டும் வெளுப்பெய்தும்
பச்சைமஞ்சளதுபோலே பசும்பொன்னிறமாய்முகமிருக்கும்
அச்சமபுரியுமலையாளே அந்தகன்கணமென்றறிந்துரைபே. (௫௱ய)

அந்தகன்கணத்திற்குஉள்ளுக்குமதலைமிலஅப்புதற்கு மருந்து,

பொன்னாங்காணிசிறுசெருப்பூலா அவுரிவேருடனே
பன்னும்பேதற்றாண்கடுக்காயும் பலமஒன்றாய்தான்அரைத்து

